514

பதினெண் கீழ்க்கணக்கு

மதுரை கூடலூர் கிழார்

இயற்றிய

# முதுமொழிக்காஞ்சி

EDITED BY

T. CHELVAKESAVAROYA MUDALIAR, M.A.,

*Pachaiyappa's College, Madras*



MADRAS:

PRINTED AT THE S.P.C.K. PRESS, VEPERY

1919



[விலை, 5 அணா

# பொருளடக்கம்







## Prefatory Note

"THERE is a great mass of noble writing ready to hand in Tamil and Telugu folk-literature, especially in the former. To raise these books in public estimation, to exhibit the true products of the Dravidian mind, would be a task worthy of the ripest scholar and the most enlightened government. I would especially draw attention to the Eighteen Books that are said to have received the sanction of the Madura College, and are among the oldest specimens of Dravidian literature. Any student of Dravidian writings would be able to add a score of equally valuable books. If these were carefully edited, they would form a body of Dravidian classics of the highest value." Thus wrote Mr. Charles E. Gover, member of the Royal Asiatic Society, in his introduction to the Folk-Songs of Southern India, printed in 1871. His desire was to a great extent accomplished by veterans like Arumuka Navalar, Damodaram Pillai, and Swaminadaiyar (Mahamahopadhyaya). The Mahamahopadhyaya rescued in time most of the "score of equally valuable books" condemned to oblivion in private and public libraries in Southern India. These publications have helped Archaeologists and Epigraphists in making many discoveries, and Historians in determining their perspective. Two more of those "valuable books," குறுந்தொகை and நற்றிணை have recently been published by other scholars. Very few yet remain to be published.

Of the Eighteen books only about half a dozen have been edited by scholars of repute. Some, very badly printed long ago, are not available now. Two or three have not yet been printed. One of them was a puzzle to the Tamil world for a whole century. Sriman Swarnam Pillai of the Hindu College, Tinnevelly, deserves all credit for reclaiming it from Lethe. It is a copy made by (காரி ரத்தின கவிராயர்) Kari Ratna Kaviroyar, commentator, of Maran Alankaram, a Tamil scholar of vast erudition who lived in the sixteenth century. This book is (இன்னிலை) Innilai by (பொய்கையார்) Poikaiyar, author of Kalavali Narpadu. This book has been printed recently by Sriman V. O. Chidambaram Pillai (with his own commentary). Some scholors are of opinion that the one work of the Eighteen which puzzles the Tamil world is கைந்நிலை and not இன்னிலை. There are others who say that ஐந்திணை comprises five works of which one is yet unearthed.

The present edition of Muthu Mozhi kanji includes the old commentary (a word for word paraphrase) and some notes added by me.

Perambur, Madras,
1st July, 1919.

T. C.

# பதிப்புரை



முற்காலங்களில் பாண்டியர்களால் ஏற்பட்ட தமிழ்ச் சங்கங்கள் மூன்று. அவை தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கம் என்பன. தலைச்சங்கமும் இடைச்சங்கமும் சரிதக்காலத்துக்கு முற்பட்டவை. கடைச்சங்கம் ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த தென்பது இக்காலப் புலவரில் பலருடைய கொள்கை. கடைச்சங்கம் இருந்த இடம் மதுரை. அச்சங்கமிருந்து தமிழாராய்ந்தவர், சிறுமேதாவியார், சேந்தம்பூதனார், அறிவுடையானார், பெருங்குன்றூர்கிழார், இளந்திருமாறன், மதுரையாசிரியர் நல்லந்துவனார், மருதனிளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் முதலானவர் அவருள்ளிட்டுப் பலர் பாடினார். அவர்கள் பாடியன கூத்தும் வரியும் பேரிசையும் சிற்றிசையும் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் பதினெண்கீழ்க்கணக்கும் என்றித் தொடக்கத்தன. இவற்றில் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் மேற்கணக்கின் பாற்படும். முதுமொழிக்காஞ்சி பதினெண் கீழ்க்கணக்கில் ஒன்று.

காஞ்சியென்பது பொருளிலக்கணத்தில் புறப்பொருளின் பகுதியைச் சேர்ந்தது. பொருளாவது சொற்றொடர் கருவியாகச் செய்யுளிடத்தே சார்ந்து விளங்கும் இயல்பினையுடையது. அது நோக்குதற்கு எட்டாத வீட்டை விடுத்து, அறமும் பொருளும் இன்பமும் என மூன்று வகையினையுடையது. அவற்றில், இன்பமென்னும் இயல்பினையுடைத்தாகி உள்ளத்தின் கண்ணே நிகழும் ஒழுக்கம் அகம் எனப்பெறும். அது, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலையோடு பெருந்திணை கைக்கிளை யென்னும் எழுவகையினையுடையது. அறமும் பொருளும் என்னும் இயல்பினையுடைத்தாய்ப் புறம்பே நிகழும் ஒழுக்கம் புறம் எனப்பெறும் , அது வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகையொடு, காஞ்சி, பாடாண் என்னும் எழுவகையினையுடை

யது. இப்புறத்திணையேழும் அவ்வகத்திணையேழற்கும் முறையே புறனாயவை.

புறப்பொருள் ஏழனுள் வெட்சியாவது ஆதந்தோம்பலும் அந்நிரை மீட்டலும். வஞ்சியாவது பகைமேற் சேறல் உழிஞையாவது அரணை முற்றலும் காத்தலும். தும்பையாவது வந்த வேந்தனை இருந்த வேந்தன் எதிர்சென்று பொருதல். வாகையாவது பொருது வெற்றி பெறுதல் (இது அரசவாகை. ஏனையோருடைய இயல்பை மிகுதிப் படுத்தலும் வாகை எனப்பெறும்.) காஞ்சியாவது நிலையாத உலகியற் கையைப் பொருந்திய நெறியினையுடையது. பாடாணாவது பாடுதற் குரிய ஆண்மகனது பெருமை பொருந்திய ஒழுக்கத்தைப் பாடுகின்ற அம்முறையினையுடையது இவை யெல்லாம் அரசனுக்கும் குடிகளுக்கும் உரிய அறமும் பொருளும் உணர்த்துவனவாம்.

அறம்பொரு ளின்பங்களின் நிலையின்மையை உரைத்தற்குரிய காஞ்சி எல்லாத்திணைக்கும் ஒத்த மரபினது. எதிர்த்த வேந்தர்க்கும் எதிர்சென்று தாக்கும் வேந்தர்க்கும் அறம்பொரு ளின்பங்களின் நிலையாமையைக் கூறி, இறப்பினுக் கஞ்சாது நின்று வீடுபேறு நிமித்தமாகச் செய்யக்கடவ கடமைகளை அறம் பிறழாமல் செய்யுமாறு வற்புறுத்துவதே இத்திணையின் குறிப்பு. "தலைவரும் பொருளைத் தக்காங் குணர்த்தி, நிலையி யாமை நெறிபட வுரைத்தன்று."

முதுமொழிக்காஞ்சி யென்பது காஞ்சித்திணையின் துறைகளில் ஒன்று: முதுமொழிகளால் காஞ்சியை விளக்குவது என்பதாம் "ஏதமில் அறமுதல் இயல்பிவை யென்னும், மூதுரை பொருந்திய முதுமொழிக்காஞ்சி" என்பது இலக்கணவிளக்கம். இதனைத் திவாகரர் "கழிந்தோர் ஏனை ஒழிந்தோர்க்குக காட்டிய, முறைமை யாகும் முதுமொழிக்காஞ்சி" என்றார்.

இத்துறைப் பெயரே பெயரான இந்நூல் பத்ததிகாரமும் ஒவ்வோரதிகாரத்தில் பப்பத்து முதுமொழியுமாக அமைக்கப் பெற்றது. ஒவ்வொரு முதுமொழியும் ஒவ்வொரு குறட்டாழிசை. இந்நூல் அற முதலிய பாகுபாட்டை முறையாகக் கடைப்பிடித்திலது. வகுத்துக்

கொண்ட அதிகாரங்களுக் கேற்ப மும் முதற்பொருளும் இந்நூலில் விரவி உரைத்திருக்கின்றன. இன்பப் பகுதிக்குரிய முதுமொழிகள் மிகச் சிலவே. அவையும் இன்பச்சுவையை விளக்குவனவல்ல. கார் நாற்பதும் ஐந்திணையும் முப்பாலும் (இன்னிலையும்) ஒழிந்த எனைக் கீழ்க்கணக்கெல்லாம் அறம்பொரு ளின்பங்களை இங்ஙனம் உரைப் பனவே. திருக்குறளிற் கூறிய சில பொருள்களை அம்மொழிகளையே பின்பற்றிக் கூறுதலின், இந்நூல் திருக்குறளுக்குப்பின் இயற்றிய தென்பது துணிதலாகும்.

இந்நூலை இயற்றியவர் கூடலூர் கிழார் என்பவர். பழைய ஆன்றோர்கள், "புலத்துறை முற்றிய கூடலூர் கிழார்" என இவரைச் சிறப்பித்துக் கூறுவர். கூடலூர் மலைநாட்டின் கண்ணது (மதுரையென்பர் சிலர்.) படிக்காசு புலவர் "ஊரார் மலிபுலியூர்க்கோட்ட நற்குன்றத் தூரிலுள்ள 'சீராவளமலி பாக்கிழவோன்புகழ் சேக்கிழவோன்' காராளன் கூடற் கிழவோன் முதுமொழிக் காஞ்சிசொற்ற, வாரார் புரிசைக் கிழவோனும் வாழ்தொண்டை மண்டலமே" என இவரைத் தொண்டை மண்டலத்தினர் என்பர்: இவர் பெயர் புரிசைக் கிழவோன் என்பர். எட்டுத் தொகையுள் ஒன்றான ஐங்குறுநூறு தொகுத்தோர் இவரே. இவருடைய பாடல்கள் புறநானூற்றில் ஒன்றும் குறுந்தொகையில் மூன்றும் உண்டு.



# பதினெண் கீழ்க்கணக்கு விளக்கம்

வனப்பிய றானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியாற் றாய பனுவலோ
டம்மை தானே அடிநிமிர் பின்றே

என்னும் தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் 236-சூத்திரத்தின் உரை, "சிலவாக என்பது எண்ணுச் சுருங்குதல். மெல்லியவாய்ச் சிலவாய சொற்கள், எழுத்தினான் அகன்று காட்டாது சிலவெழுத்தினான் வருவது. அடிநிமிராதென்றது ஐந்தடியின் ஏறாதென்றவாறு. தாயபனுவலோ டென்றது, — இலக்கணஞ்சொல்ல எடுத்துக்கொண்ட அறம் பொருள் இன்பமென்னும் மூன்று மன்றியும் வேறு இடையிடை தாய்ச் செல்வது என்றவாறு. அஃதாவது பதினெண் கீழ்க்கணக்கு எனவுணர்க. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம் பொரு ளின்பமென அவற்றுக்கு இலக்கணங்கூறிய பாட்டுப் பயின்றுவருமாறும், கார் நாற்பது களவழி நாற்பது முதலாயின வந்தவாறும் கண்டுகொள்க" என்று உரைத்திருக்கின்றது.

அடிநிமி ரில்லாச் செய்யுட் டொகுதி
அறம்பொரு ளின்பம் அடுக்கி அவ்வகைத்
திறம்பட வருவது கீழ்க்கணக் காகும்

(பன்னிருபாட்டியல்)

---

நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைசொல் காஞ்சியுடன் ஏலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு

1. நாலடியார்—ஜைனமுனிவர்கள் இயற்றிய நானூறு வெண்பாக்களை யுடையது. பதுமனார் என்பவர் இவைகளை முப்

பாலாய் நாற்பது அதிகாரங்களாகப் பகுத்து உரையும் இயற்றினர். கடவுள் வாழ்த்தும் அவரே இயற்றிய தென்பர்.

2. நான்மணிக்கடிகை—விளம்பிநாகனார் இயற்றியது. கடவுள் வாழ்த் துட்பட நூற்றொரு வெண்பாக்களை யுடையது. ஒவ்வொன்றும் நந்நான்கு பொருளைக் கூறும்.

நாற்பது

கால மிடம்பொருள் கருதி நாற்பான்
சால வுரைத்தல் நாற் பதுவே

(இ-ள்.) காலமும் இடமும் பொருளும்பற்றி நாற்பது வெண்பாப் பொருந்த வுரைத்தல் நாற்பதாம்.

காலம்பற்றி வருவது கார்நாற்பது. இடம்பற்றி வருவது களவழி நாற்பது. பொருள்பற்றி வருவன இன்னாநாற்பது இனியவைநாற் பது. இன்னலாக்குதலை இன்னாவென்றும் இனிமையாக்குதலை இனியவை யென்றுங் கூறினர் (இலக்கண விளக்கம், பாட்டியல்—91-ரு).

3. இனியவை நாற்பது—மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ் சேந்தனார் இயற்றியது. இன்ன தின்னது இனிதென் றுரைக்கும் நாற்பது வெண்பாக்களை யுடையது.

4. இன்னா நாற்பது—கபிலர் இயற்றியது. இன்ன தின்னது துன்பந்தரும் என்றுரைக்கும் நாற்பது வெண்பாக்களை யுடையது.

5 கார்நாற்பது—மதுரைக் கண்ணங் கூத்தனார் இயற்றியது. கார்காலத்து வருவேனென்று வினைமேல் சென்ற தலைவன் வாராமையின் தலைவி பிரிவாற்றாமல் வருந்துவதைக் கூறும் நாற்பது வெண்பாக்களை யுடையது.

6 களவழிநாற்பது—பொய்கையார் இயற்றியது. போர்செய்து தோல்வியடைந்த கணைக்காலிரும்பொறையைப் பற்றிப் போய்ச் சோழன் செங்கணான் சிறையிலிட்டபோது பொய் கையார் களம்பாடி வீடுகொண்டார். இந்நூலின் பொருள், மேற்படி போர்க்கள வர்ணனை அங்கங்கே காட்டியிருக் கும் உவமைகள் நிரம்ப அழகானவை.

## ஐந்திணைச்செய்யுள்

உரிப்பொரு டோன்ற வைந் திணையும்
தெரிப்ப தைந்திணைச் செய்யு ளாகும்.

(இ-ள்.) புணர்தல் முதலிய ஐந்து ஒழுக்கமும் விளக்கும் குறிஞ்சி முதலிய ஐந்து திணையினையும் தெரித்துக் கூறுவது ஐந்திணைச்செய்யுளாம். (இலக்கண விளக்கம்—பாட்டியல்—89—சூ.)

7 **ஐந்திணையைம்பது**—மாறன் பொறையனார் இயற்றியது ஒவ்வோர் அகப்பொருட்டிணைக்கும் பப்பத்தாகப் பாடிய ஐம்பது வெண்பாக்களை யுடையது.

8. **திணைமொழியைம்பது**—சாத்தந்தையார் மகனார் **கண்ணஞ் சேந்தனார்** இயற்றியது ஒவ்வோர் அகப்பொருட்டிணைக்கும் பப்பத்தாகப் பாடிய ஐம்பது வெண்பாக்களை யுடையது

9. **ஐந்திணையெழுபது**—மூவாதியார் இயற்றியது அகப்பொருளைந்திணைக்கும் பதினான்கு பதினான்காகப் பாடிய எழுபது வெண்பாக்களை யுடையது.

10. **திணைமாலை நூற்றைம்பது**—மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனார் மாணாக்கர் **கணிமேதாவியார்** இயற்றியது. அகப்பொருளைந்திணைக்கும் முப்பது முப்பதாகப் பாடிய நூற்றைம்பது வெண்பாக்களை யுடையது.

11. **முப்பால்—திருக்குறள்** (திருவள்ளுவப்பயன்) — **திருவள்ளுவ நாயனார்** இயற்றியது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் முப்பாலாய், நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களாய், ஆயிரத்து முந்நூற்றுமுப்பது குறள் வெண்பாக்களை யுடையது பரிமேலழகர் உரை பயில வழங்குகின்றது. இந்நூலின் பெருமையை உணர்த்துவது திருவள்ளுவமாலை.

12. **திரிகடுகம்—நல்லாதனார்** இயற்றியது. மும்மூன்று பொருள்களை விளக்கும் வெண்பாக்கள் (கடவுள் வாழ்த்துட்பட), நூற்றொன்றுடையது. திருக்கோட்டியூர் இராமாநுசாசாரியர் உரை பயில வழங்குகின்றது.

13 ஆசாரக்கோவை—பெருவாயின் முள்ளியார் இயற்றியது. இருடிகள் சொல்லிய ஆசாரங்களைக் கோத்துரைக்கும் பல வகை வெண்பாக்கள் (தற்சிறப்புப்பாயிர முட்பட) நூற்றொன்றுடையது

14. பழமொழி—முன்றுறையரையனார் (ஜைனர்) இயற்றியது. ஒவ்வொரு பழமொழியை இறுதியில் பெற்ற நானூறு வெண்பாக்களையுடையது.

15 சிறுபஞ்சமூலம்—காரியாசான் (ஜைனர்) இயற்றியது. ஐவைந்து நீதிகளைக் கூறும் தொண்ணூற்றெட்டு வெண்பாக்களையுடையது.

16. இன்னிலை—பொய்கையார் பாடியது. மதுரையாசிரியர் பூதஞர் தொகுத்தது. கடவுள் வாழ்த்து, பாரதம் பாடிய பெருந்தேவஞர் இயற்றியது. அறப்பால் பத்தும் பொருட்பால் ஒன்பதும் இன்பப்பால் பன்னிரண்டும் வீட்டிலக்கப்பால் பதிஞன்கும் ஆகிய நாற்பத்தைந்து வெண்பாக்களையுடையது. (கைந்நிலை என்பர் சிலர். ஐந்திணை யைந்து நூலில் இன்னும் காணக்கிடையாததொன்று என்பர் சிலர்.)

## முதுமொழிக்காஞ்சி

பலர்புகழ் புலவர் பன்னின தெரியும்
உலகியல் பொருண்முடி புணரக் கூறின்று

(இ—ள்.) எல்லாரும் கொண்டாடும் அறிவுடையோர் குற்றம் நீக்கி ஆராயும் உலகத்தியலுள் முடிந்த பொருளாகிய அறம்பொருளின்பத்தை அறியச் சொல்லியது (புறப்பொருள்வெண்பாமாலை—பொதுவியற் படலம்—காஞ்சிப்பொதுவியற்பால—1)

ஏதமி லறமுதல் இயல்பினை யெனனும
மூதுரை பொருந்திய முதுமொழிக் காஞ்சி.

(இலக்கணவிளக்கம்—619—உ)

கழிந்தோர் ஏனை ஒழிந்தோர்க்குக் காட்டிய
முறைமையாகும் முதுமொழிக்காஞ்சி.

(திவாகரம்—ஒலிபற்றிய பெயர்த்தொகுதி—126)

[காஞ்சியின் பொதுவிலக்கணம்]

பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே

(தொல்–புறத்திணை–23–சூ.)

17. முதுமொழிக்காஞ்சி–மதுரை கூடலூர் கிழார் இயற்றியது பத்ததிகாரமாய் ஒவ்வோரதிகாரமும் பப்பத்துக் குறட்டாழிசையால் அமைந்தது ஒவ்வோரடியும் ஒவ்வொரு முதுமொழி (தொல்–பொருள்–490)

18 ஏலாதி–தமிழாசிரியர் மகனார் மாக்காயனார் மாணாக்கர் கணிமேதாவியார் (ஜைனர்) இயற்றியது அவ்வாறு பொருளுரைக்கும் வெண்பாக்கள் (கடவுள் வாழ்த்து நீங்கலாக) எண்பதுடையது



# முதுமொழிக்காஞ்சி

## I. சிறந்த பத்து.

1 ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை

(பழைய பொழிப்புரை.) கடல் சூழ்ந்த உலகத்து மக்கட் கெல்லாம் ஓதலினும் மிக்க சிறப்புடைத்து ஆசாரமுடைமை

(பதவுரை.) ஆர்கலி உலகத்து — கடல்சூழ்ந்த உலகத்தில், மக்கட் கெல்லாம்—மனிதர் எல்லார்க்கும், ஒழுக்கமுடைமை — சதாசாரமுடையவராதல், ஓதலின் — நூல்களைக் கற்றலைக் காட்டிலும், சிறந்தன்று — சிறந்ததாம்.

“ ஓதலி னன்றே வேதியர்க் கொழுக்கம்.”—ஔவையார்.

“ மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.”—திருக்குறள்.

ஆர்கலி — நிறைந்த ஓசை — நிறைந்த ஓசையையுடையது — கடல் : வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை சிறந்தன்று—உடன்பாட்டு இறந்தகால வினைமுற்று : இதில் அன் சாரியை. ஆசாரம்—விலக்கியன ஒழித்து விதித்தன செய்தல் : சீலம்.

2. காதலிற் சிறந்தன்று கண்ணஞ்சப் படுதல்.

(ப—பொ.) பிறர் தன்மேற் செய்யும் காதலினும் சிறந்தது கற்றவரால் கண்ணஞ்சப்படுதல.

(ப—ரை.) காதலின்—ஒருவன் பிறரால் அன்பு செய்யப்படுவதைக் காட்டிலும், கண்ணஞ்சப்படுதல்—அவரால் அஞ்சப்படுதல், சிறந்தன்று—சிறந்தது.

பிறருடைய அன்பினும் நன்குமதிப்பே சிறந்தது என்பதாம்.

காதல் — விருப்பம். கண்ணஞ்சுதல் — அஞ்சுதல்: ஒருவன் தான் பெற்றிருக்கும் மதிப்பினாலே பிறர் அஞ்சிநடத்தல். கண்ணஞ்சப்படுதல்—பிறர் அஞ்சி நடக்கத்தக்க நன்குமதிப்பு.

3. மேதையிற் சிறந்தன்று கற்றது மறவாமை.

(ப—பொ.) தானாக ஒன்றை மதியுடைமையான் அறியும் அறிவினும் மிக்க சிறப்புடைத்துத் தான் கற்றதனைக் கடைப்பிடித்திருத்தல்.

(ப—ரை.) மேதையின்—புத்தி நுட்பத்தால் தானே ஒன்றை அறியும் அறிவைக்காட்டிலும், கற்றது மறவாமை — கற்றநூல்களின் பொருளை மறவாதிருப்பது, சிறந்தன்று — சிறந்தது.

மேதை — அறிவு. கடைப்பிடித்தல் — மறவாதிருத்தல்.

கற்ற கல்வியை மறவாமையானது அறிவு நுட்பத்தைக் காட்டிலும் சிறந்தது. அறிவு நுட்பம் மாத்திரம் அமைத்திருப்பது போதாது: கற்ற கல்வியை மறவாமையும் வேண்டும். நுட்பமாகப் பொருள்களை மேலு மேலும் நுனித்தறிய வல்லவனாயினும், ஒருவன் முன் குருமுக மாகக் கற்றதை மறவாமல் போற்றல் வேண்டும்.

4. வண்மையிற் சிறந்தன்று வாய்மை யுடைமை.

(ப—பொ.) செல்வத்தினும் மிக்க சிறப்புடைத்து மெய் யுடைமை.

(ப—ரை.) வாய்மை உடைமை—உண்மையுடைமை, வண்மையின்—செல்வமுடைமையைக் காட்டிலும், சிறந்தன்று—சிறந்தது.

வண்மையை ஈகையென்று கொள்வதுமாம்.

செல்வத்தா லாகும் நன்மையைக் காட்டிலும் வாய்மையா லாகும் நன்மை சிறந்தது.

" யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற. "—திருக்குறள்.

" வளமையிற் சிறந்தன்று "—பாடபேதம்.

5. இளமையிற் சிறந்தன்று மெய்ப்பிணி யின்மை.

(ப—பொ.) இளமையினும் மிக்க சிறப்புடைத்து உடம்பு நோயின்மை.

(ப—ரை.) மெய் பிணியின்மை—சரீர செளக்கியம், இளமையின்—பாலியத்தைக் காட்டிலும், சிறந்தன்று—மிக்க சிறப்புடையது.

நோயோடு கூடியதாயின் இளமை வேண்டா; நோயில்லையாயின் முதுமையும் அமையும்.

" நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் " என்றது ஒரு மூதுரை.

6. நலனுடை மையின் நாணுச் சிறந்தன்று.

(ப—பொ.) அழகுடைமையினும் மிக்க சிறப்புடைத்து நாணுடைமை.

(ப—ரை.) நாணு—அடாத காரியங்களைச் செய்யக் கூசுதலானது, நலன் உடைமையின் — ஒருவன் அழகுடையவனாதலைக் காட்டிலும், சிறந்தன்று—மிக்க சிறப்புடையது.

" அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு " ஆதலின், " நலம் வேண்டின் நாணுடைமை வேண்டும்: " " நலஞ்சுடும் நாணின்மை நின்றக்கடை " ஆதலால் நாணுடைமை நலனுடைமையின் சிறந்ததாம்.

நாணு என்பதில் உ சாரியை. நாணுவது " செய்யத் தகாதனவற்றின்கண் உள்ள மொடுங்குதல். "

7. குலனுடை மையின் கற்புச் சிறந்தன்று.

(ப—பொ.) நல்ல குலமுடைமையினும் கல்வியுடைமை சிறப்புடைத்து.

(ப—ரை.) கற்பு—ஒருவர் கல்வி உடையராதல், குலன் உடைமையின்—நற்குடிப் பிறப்பு உடையராதலைக் காட்டிலும், சிறந்தன்று—சிறப்புடையது.

உயர்குடிப் பிறப்பினும் சிறந்தது கல்வி.

"மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றா ரனைத்திலர் பாடு"—திருக்குறள்.

"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்,
கீழ்ப்பா லொருவன் கற்பின்,
மேற்பா லொருவனும் அவன்கட் படுமே".—புறம்.

8. கற்றலிற் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று.

(ப—பொ.) தான் ஒன்றைக் கற்குமதனினும் சிறப்புடைத்துக் கற்றாரை வழிபாடு செய்தல்.

(ப—ரை) கற்றாரை—கல்வியறிவுடையாரை, வழிபடுதல்—உபசரித்த தொழுகுதல், கற்றலின் — ஒன்றைக் கற்பதைக் காட்டிலும், சிறந்தன்று—சிறந்ததாம்.

ஒருவன் கற்றலும் வேண்டும்; கற்றாரை வழிபடுதலும் வேண்டும்: இவ்விரண்டிலும் வழிபாடு சிறந்ததாம். வழிபாடு செய்தலால் குருவருள் உண்டாகும்: அஃதுண்டாகவே தான் கற்கலுற்றது கைகூடும். தண்டாப்பத்திலும் இந்நூல் "கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்" என்றுரைக்கின்றது.

"தேவரனையர் புலவரும்; தேவா
தமரனையர் ஓரூர் உறைவார்; தமருள்ளும்
பெற்றன்னர் பேணி வழிபடுவார்; கற்றன்னர்
கற்றாரைக் காதலவர்".—நான்மணிக்கடிகை.

9. செற்றாரைச் செறுத்தலிற் றற்செய்கை சிறந்தன்று.

(ப—பொ.) பகைவரைச் செறுத்தலினும் மிக்க சிறப்புடைத்துத் தன்னைப் பெருகச்செய்தல்.

(ப—ரை.) தற்செய்கை—தன்னைப் பெருகச்செய்தல், செற்றாரை—பகைவரை, செறுத்தலின்—தண்டித்தலினும், சிறந்தன்று—சிறப்புடையதாம்.

தற்செய்கை—தன்னைப் பகைவரினும் பெருகச் செய்தல்: அதாவது அங்கங்களை அபிவிர்த்தி செய்தல்.

அரசன் தன் அங்கங்களை அபிவிர்த்தி செய்தால் பகைவர் தாமே அஞ்சி அடங்குவர்: தண்டோபாயத்தை அனுசரிக்கும் அவசியம் இல்லை. ஆகவே பகைவரைத் தண்டிக்கப் புகுவதைக் காட்டிலும் அரசன் தன் அங்கங்களைப் பலப்படுத்துவதே சிறப்புடையது என்பதாம்.

"செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்".—திருக்குறள்.

10. முற்பெரு கலிற்பின் சிறுகாமை சிறந்தன்று.

(ப—பொ). செல்வம் முற்காலத்துப் பெருகிப் பின் அழிதலின் நின்ற நிலையிற் சிறுகாமை சிறப்புடைத்து.

(ப—ரை.) முன்பெருகலின் – செல்வம் முற்காலத்துப் பெருகிப் பின் அழிதலைக்காட்டிலும், பின் சிறுகாமை – உள்ள அளவில் பின் குறையாமை, சிறந்தன்று—சிறப்புடையதாம்.

செல்வம், உள்ள அளவினும் ஓங்கி வளர்ந்து அழிவதைக் காட்டிலும், உள்ள அளவிற் குறையாதிருப்பதே சிறந்தது. "தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர், நிலையின் இழிந்தக் கடை" (திருக்குறள்) ஆகையால், நின்ற நிலையில் தாழாமையே சிறந்தது. ஆகவே நின்ற நிலையில் தாழாதபடி முயற்சிசெய்தல் வேண்டும் என்பதாம்.



## II. அறிவுப்பத்து.



1. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
பேரிற் பிறந்தமை ஈரத்தி னறிப.

(ப—பொ.) கடல் சூழ்ந்த உலகத்து மக்களெல்லாருள்ளும் ஒருவன் பெருங்குடிப் பிறந்தமையை அவன் ஈரமுடைமையானே அறிவர்.

(ப—ரை.) ஆர்கலி உலகத்து—கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட் கெல்லாம் – மனிதர் எல்லாருள்ளும், பேரில் பிறந்தமை – ஒருவன்

பெருங்குடியிற் பிறந்ததை, ஈரத்தின்—உயிர்களிடத்தில் அவனுக்குள்ள அன்பினால், அறிப—அறிவர்.

"நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக், குலத்தின்கண் ஐயப் படும்" (திருக்குறள்) ஆகையால், ஒருவன் உயர்குடியில் பிறந்தவன் என்பதற்கு அவனிடத்துள்ள கருணையே அறிகுறி.

2. ஈர முடைமை ஈகையி னறிப.

(ப-பொ.) ஒருவன் நெஞ்சின்கண் ஈரமுடையான் என்பதனை அவன் பிறர்க்குக் கொடுக்கும் கொடையினானே அறிவர்.

(ப-ரை.) ஈரம் உடைமை—ஒருவன் மனத்தில் கருணையுடையவன் என்பதை, ஈகையின்—ஏழைகளுக்குக் கொடுப்பதனால், அறிப—அறிவர்.

ஒருவனிடத்துக் கருணை உண்டு என்பதற்கு அவனுடைய ஈகையே அறிகுறி.

3. சோரா நன்னட் புதவியி னறிப.

(ப-பொ.) ஒருவன் தப்பாத கடைப்பிடியுடைய நல்ல நட்பினையுடையன் என்பது அவன் நட்டார்க்குச் செய்யும் உதவியினானே அறிவர்.

(ப-ரை.) சோரா நல் நட்பு—ஒருவன் தளராத நல்ல சிநேகம் உடையவன் என்பதை, உதவியின்—அவன் தனது சிநேகருக்குச் செய்யும் உதவியினால், அறிப—அறிவர்.

சோரா—இளையாத: உறுதியுள்ள.

ஒருவர் ஒருவரோடு உறுதியான நட்புடையவர் என்பதற்கு அவர் அவருக்கு ஆபத்திலே செய்யும் உதவியே அறிகுறி. "ஆபத்திலே அறியலாம் அருமை சிநேகிதனை" என்றது ஓர் முதுரை.

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு."—திருக்குறள்.

4. கற்ற துடைமை காட்சியி னறிப.

(ப-பொ.) ஒருவனது கல்வியை அவன்றன் அறிவினானே அறிவர்.

(ப—ரை.) கற்றது உடைமை—ஒருவன் கல்வியுடையனாயிருத்தலை, காட்சியின்—அவனுடைய அறிவினாலே, அறிப—அறிவர்.

காட்சி—அகக்கண்ணாற் காணுதல் : அறிவு.

"மாந்தர்க்குக் கற்றனைத் தூறும் அறிவு" ஆகையால், ஒருவன் கற்ற கல்வியின் அளவிற்கு அவனுடைய அறிவின் அளவே அறிகுறி.

5. ஏற்ற முடைமை எதிர்கோளி னறிப.

(ப—பொ.) ஒருவன் ஆராய்ந்து துணியவல்லன் என்பதனை அவன் முற்கொண்டு பாதுகாக்கும் காப்பானே அறிவர்.

ஏற்றம் — உய்த்தல். எதிர்கோள் — (எதிர்த்தல்—முற்படுதல்) முற் கொண்டு பாதுகாக்கும் காப்பு.

(ப—ரை.) ஏற்றம் உடைமை—ஒரு காரியத்தை ஒருவன் ஆராய்ந்து முடிக்க வல்லவன் என்பதை, எதிர்கோளின் — இடையூறுகள் வருவதற்கு முன்னே அவன் செய்யும் பாதுகாவலால், அறிப—அறிவர்.

ஒருவன் காரிய முடிக்கவல்லவன் என்பதற்கு, அக்காரியத்தில் வருதலான இடையூறுகளை யறிந்து அவன் செய்யும் பாதுகாப்பே அறிகுறி என்பதாம்.

"எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்"

"வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
ஆராய்வான் செய்க வினை"—திருக்குறள்

"ஏற்றமுடைமை" என்று பாடங்கொண்டு, ஒருவன் குடிப் பிறப்பு முதலிய உயர்வுடையன் என்பதை அவன் தன்னிடம் வருவாரை எதிர்கொண்டு செய்யும் உபசாரத்தால் அறிக என்றும் பொருளுரைப்பர். அவ்வுபசாரங்கள் "இருக்கை யெழலும் எதிர்செலவும் ஏனை விடுப்ப ஒழிதலோ டின்ன—குடிப்பிறந்தார் குன்றா வொழுக்க மாக் கொண்டார்" (நாலடியார்) என்பதனால் அறியப்படும்.

6. சிற்றிற் பிறந்தமை பெருமிதத்தி னறிப.

(ப—பொ.) சிறுமையுடைய குடியின்கண் பிறந்தான் என்பதனை அவன் செருக்கினானே அறிவர்.

(ப—ரை.) சிற்றில் பிறந்தமை — ஒருவன் இழிகுடியிற் பிறந்தவன் என்பதனை, பெருமிதத்தின் — அவனுடைய கர்வத்தினால், அறிப — அறிவர்.

"(பெருமை பெருமித மின்மை) சிறுமை, பெருமிதம் ஊர்ந்து விடல்" ஆதலால், ஒருவன் இழிகுடியில் பிறந்தவன் என்பதற்கு அவன் கொண்டுள்ள கர்வமே அறிகுறியாகும்.

"பணியுமாம் என்றும் பெருமை: சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து"—திருக்குறள்

7. குத்திரஞ் செய்தலிற் கள்வனாத லறிப

(ப—பொ.) ஒருவன் ஒருவன் படிறுசெய்யும் படிற்றால் அவன் கள்வனாதல் அறிவர்.

குத்திரம்—படிறு, வஞ்சகம்.

(ப—ரை.) குத்திரம் செய்தலின் – ஒருவன் ஒருவருக்குச் செய்யும் வஞ்சகச் செயலால், கள்வன் ஆதல் – அவன் திருடன் என்பதை, அறிப—அறிவர்.

ஒருவன் களவு செய்யும் கருத்தினன் என்பதற்கு அவனுடைய வஞ்சகச் செயலே அறிகுறி.

"அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு."—திருக்குறள்.

8 சொற்சோர் வுடைமையின் எச்சோர்வு மறிப

(ப—பொ) சொற் சோர்வுபடச் சொல்லுதலான் அவனுடைய எல்லாச் சோர்வையும் அறிவர்

சோர்வு—வழுவுதல். சொற்சோர்வு – சொல்ல வேண்டுவதை மறப்பான் ஒழிதல்.

(ப—ரை.) சொற்சோர்வு உடைமையின் – ஒருவன் சொல்லும் சொற்களில் தவறுதல் உடையனாதலால், எ சோர்வும் – அவனிடத்துள்ள எல்லாத் தவறுகளையும், அறிப—அறிவர்.

ஒருவனிடத்தில் பலவித சோர்வுகள் உண்டு என்பதற்கு அவனுடைய சொற்சோர்வே அறிகுறி.

"சொற்சோர்வுபடேல்."—ஔவையார்.

"சொல்லுங்காற் சோர்வின்றிச் சொல்லுதல் மாண்பினிதே."—இனியா நாற்பது.

9 அறிவுசோர் வுடைமையிற் பிறிதுசோர்வு மறிப.

(ப—பொ.) ஒருவன் தன்னறிவின்கண் சோர்வுடைமையின் எல்லாச் சோர்வுடையன் என்பதறிவர்

(ப—ரை) அறிவு சோர்வு உடைமையின்—ஒருவன் அறிவு தளர்ச்சியுடையனு யிருத்தலால், பிறிது சோர்வும் — அவனிடத்துள்ள வினைத் தளர்ச்சிகளையும், அறிப—அறிவர்.

ஒருவன் பலவகைத் தளர்ச்சிகளையும் உடையவன் என்பதற்கு அவனுடைய அறிவின் தளர்ச்சியே அறிகுறி

10. சீருடை யாண்மை செய்கையி னறிப

(ப—பொ) ஒருவன் புகழுடைய ஆண்வினைத் தன்மையை அவன் செய்கையான் அறிவர்

(ப—ரை) சீர் உடை – புகழ்பொருந்திய, ஆண்மை – (ஒருவனது) ஆண்மையை, செய்கையின் – அவனுடைய செய்கையால், அறிப— அறிவர்.

ஒருவன் ஆண்மையுடையவன் என்பதற்கு அவனுடைய செயல்களே அறிகுறியாம்.

ஆண்மை—(ஆண் + மை)—ஆடவா தன்மை: பௌருஷம்: வீரம் ஆள் + மை எனக்கொண்டு, ஆளுந்தன்மை ஆள்வினைத் தன்மை என்றலுமாம்.



## III. பழியாப்பத்து.



1 ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம
யாப்பி லோரை இயல்புகுணம் பழியார்

(ப—பொ.) கடல் சூழ்ந்த உலகத்து மக்களெல்லாருள்ளும் ஒரு செய்கையின் கண்ணும் நிலையில்லாதா ரியற்கையாகிய குணத்தை யாவரும் பழியார்

(ப—ரை.) ஆர்கலி உலகத்து—கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட்கெல்லாம் – மக்கள் எல்லாருள்ளும், யாப்பு இலோரை – யாதொரு

செய்கையிலும் உறுதியான நிலையில்லாதவருடைய, இயல்பு குணம்— இயற்கையாகிய குணத்தை, பழியார் — எவரும் பழித்துரையார்

யாப்பு — (யா + பு) — கட்டு : உறுதி : நிலை. "அது முதற்காயின் சினைக்கையாகும்" என்றபடி, யாப்பிலோரது இயல்பு குணத்தைப் பழியார் என முடித்துக் கொள்ளவேண்டும்.

ஒருவர் இயல்பாகவே எக்காரியத்திலும் நிலையில்லாதவ ராயின் அவ்வியல்பைப் பழித்துரைத்தலால் பயனில்லை என்பதாம்.

2. மீப்பி லோரை மீக்குணம் பழியார்

(ப—பொ.) மேன்மைக்குணம் இல்லாரை மேன்மை செய் யாமையை யாவரும் பழியார்.

(ப—ரை.) மீப்பு இலோரை — மேன்மைக்குணம் இல்லாதவரது, மீக்குணம் — மேன்மையானவற்றைச் செய்யும் இயல்பில்லாமையை, பழியார் — எவரும் பழித்துரையார்.

கீழ்மக்களிடம் மேலோர்க்குரிய குணமும் செய்கையு மில்லா மையை எவரும் பழித்துரையார்.

மீக்குணம் என்பதை மீச்செலவு என்பதுபோல வரம்புகடந்த செய்கையைச் செய்யும் இயல்பு எனக்கொள்வதும் பொருந்தும்.

3. பெருமை யுடையதன் அருமை பழியார்.

(ப—பொ.) பெருமையுடைய தொன்றனை முடித்துக்கொ ள்ளுகை அரிதென்று அதனைப் பழித்து முயற்சி தவிரார்.

(ப—ரை.) பெருமை உடையதன் அருமை — பெருமையுடைய தொருபொருளை முடித்துக்கொள்ளும் அருமையைப்பற்றி, பழியார்— அவ்வருமையைப் பழித்து முயற்சியை விடார்.

உடையதன்—உடைய அதன்.

"அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும், பெருமை முயற்சி தரும்" (திருக்குறள்) ஆகையால் ஒரு பெரிய பொருள் கிட்டுவது அரி தென் றெண்ணி, அதுகாரணமாக அதனை முடித்தற்குரிய முயற்சி யைச் செய்யாமலிரார்.

"பெருமை யுடையவர் ஆற்றுவர் ஆற்றின்
அருமை யுடைய செயல்."—திருக்குறள்.

அருமை யுடையதன் பெருமை பழியார்.

(ப-பொ.) அருமையுடைய தொன்றினை முடித்துக்கொள்ளும்பொழுது அரிதென்று பழித்து அதின்கண் உள்ள முயற்சிப் பெருமையைத் தவிரார்.

(ப-ரை.) அருமை உடையதன் பெருமை – அருமையுடையதொரு பொருளை அரிதென்று முயற்சிப் பெருமையை, பழியார்–பழித்துத் தவிரார்.

கிடைத்தற் கருமையான பொருளினது அருமையைப் பழியாமல் கிடைத்தற்குரிய கௌரவமான முயற்சிகளைச் செய்வர்.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்."—திருக்குறள்.

5. நிறையச் செய்யாக் குறைவினை பழியார்.

(ப-பொ.) ஒருவினையை நிரம்பச் செய்யாதவர்க்கு முன்போய் அக்குறைவினையை யாவரும் பழியார்.

"செய்யாததற்கு முன்பே அக்குறை வினையை" என்றும் "செய்வதற்கு முன் செய்த குறைவினையை" என்றும் பிரதிபேதம் உண்டு.

(ப-ரை.) நிறைய செய்யா – நிரம்பச் செய்து முடிக்காத, குறைவினை – குறைவினையை, பழியார் – எவரும் பழித்துரையார்.

முழுவதும் செய்துமுடியாத குறைவேலையைக் கண்டு எவரும் பழித்தல் செய்யார். அவ்வேலை பின்னும் திருத்தமெய்தி நன்கு முடிதல் கூடுமாதலால் அறிவுடையோர் பழியார்.

6. முறையி லரசர்நாட் டிருந்து பழியார்.

(ப-பொ.) நடுவுசெய்யாத அரசர்நாட்டின்கண் இருந்து அவ்வரசர் நடுவுசெய்யாமையை யாவரும் பழியார்.

(ப-ரை.) முறைஇல் – நீதிமுறை இல்லாத, அரசர் நாடு – அரசருடையநாட்டில், இருந்து – வசித்திருந்து, பழியார் – அவ்வரசர் நீதிமுறை செலுத்தாமையை எவரும் பழித்துரையார்.

கொடுங்கோலரசருடைய நாட்டில் வசிப்பவர் அக்கொடுங்கோன்மையைப் பழித்துரைத்தால் அவ்வரசருடைய கொடுமைக்கு உள்ளாவராதலின் அது செய்யார்.

நடுவுநிலைமை—"பகைநொதுமல் நண்பு என்னும் மூன்று பகுதியினும் அறத்தின் வழுவாது ஒப்பநிற்கும் நிலைமை" என்றும், நடுவு—"ஒருவன் பொருட்குப் பிறன் உரியனல்லன் என்னும் நடுவு" என்றும் உரைப்பர் பரிமேலழகர்.

7. செயத்தக்க நற்கேளிர் செய்யாமை பழியார்.

(ப—பொ.) தமக்கு உதவி செய்தற்குத் தக்க நல்ல கேளிர் உதவி செய்திலரென்று பிறர்க்குச் சொல்லிப் பழியார்.

(ப—ரை.) செயத்தக்க—தமக்கு உதவிசெய்தற் குரிய, நல் கேளிர்—நல்ல உறவினர், செய்யாமை – அங்ஙனம் உதவிசெய்யாமையை, பழியார் – நல்லோர் பிறரிடம் பழித்துரையார்.

கேளிர் என்பது நட்பினரையும் குறிக்கும். கேளிர் என்பதில் இர் – பலர்பால் விகுதி (பெண்டிர் புத்தேளிர் என்பவற்றிற்போல).

சுற்றத்தார் உதவிசெய்திலரென்று பழியாமல் அவரைத் தழுவிக் கொண்டுபோதலே சிறப்புடைத்து.

கேளிரை நட்பினர் என்று கொண்டால், நட்பினர் உதவிசெய்திலரென்று பழியாமல் நட்பிற் பிழைபொறுத்தலே சிறப்புடைத்து என்பதாம்.

8. அறியாத் தேசத் தாசாரம் பழியார்.

(ப—பொ.) தான் அறியாத தேசத்தின்கண் சென்று அங்குள்ளார் ஒழுகும் ஒழுக்கத்தைப் பழியார்.

(ப—ரை.) அறியாத தேசத்து – தான் முன்னறியாத தேசத்தில் வழங்கும், ஆசாரம் – ஒழுக்கங்களை, பழியார் – பழித்துரையார்.

அந்தந்த தேசத்தின் வசதிக்கும் நிலமிதிக்கும் நாகரிகத்திற்கும் ஏற்றவாறு ஆசாரங்கள் வேறுபடுதலால், தான் முன்னறியாத தேசத்தின்கண் சென்றவன், அங்கு வழங்கும் ஆசாரங்கள் தன்தேசத்தில் வழங்கும் ஆசாரங்களோடு ஒத்திராமையைக் கண்டு, அவைகளைப் பழித்துரைத்த லாகாது.

9. வறியோன் வள்ளிய னன்மை பழியார்.

(ப—பொ.) வறுமை யுடையானை வண்மையுடையா னல்லனென்று பழியார்.

(ப—ரை.) வறியோன் – பொருளில்லாதவனது, வள்ளியன் அன்மை – ஈகையில்லாமையை, பழியார் – எவரும் பழித்துரையார்.

பொருளுடையவன் பொருளில்லார்க்கு ஈயாமையை எல்லாரும் பழிப்பர்: பொருளில்லாதவன் ஈயாமையை ஒருவரும் பழியார்.

10 சிறியா ரொழுக்கம் சிறந்தோரும் பழியார்.

(ப—பொ.) சிறுமைக்குணம் உடையாருடைய கீழ்மைக் குணத்தை ஒழுக்கத்தான் மிக்காரும் கண்டால் பழியார்.

(ப—ரை.) சிறியார் – கீழோருடைய, ஒழுக்கம் – துராசாரத்தை, சிறந்தோரும் – மேலோரும், பழியார் – பழித்துரையார்.

துராசாரம் கீழோருக் கியல்பாதலால் மேலோர் அதனைப் பழித்துரையார்.



## IV. துவ்வாப் பத்து.



1. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
பழியோர் செல்வம் வறுமையிற் றுவ்வாது.

(ப—பொ.) ஆர்கலியாற் சூழப்பட்ட உலகத்து எல்லாமக்களுள்ளும் பழியுடையோர் செல்வம் வறுமையின் நீங்கியொழியாது.

(ப—ரை.) ஆர்கலி உலகத்து – கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட்கெல்லாம் – எல்லா மக்களுள்ளும், பழியோர் – பழிக்கப்படுபவரது, செல்வம்–செல்வமானது, வறுமையின்–வறுமைத்தன்மையினின்றும், துவ்வாது–நீங்கி யொழியாது

பழியோர் என்றது "உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றும், கெடாஅத நல்லறமுஞ் செய்யார்," "நடுவிகந்தா மாக்கமுடையார்" முதலாயினரை. பாத்துண்ணாமையாலும் அதனால் இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் பெறுதொழிதலாலும் அவர் செல்வராயிருந்தும் வறியவரையே ஒப்பர்.

நடுவிகந்தாம் ஆக்கத்தை ஒழியவிடாமல் ஈட்டினோர் பழிப்புக்கிடமாதலால், அவர் செல்வத்தைப் பழியோர் செல்வம் என்றார்.

"பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை."—திருக்குறள்.

"மனந்தூய்மை......இனந்தூய்மை தூவா வரும்" — என்பதில் தூவா(க) என்பது பற்றுக்கோடாக என்ற பொருளில் வந்திருக்கிறது.

"கருமஞ்செயவொருவன்கைதூவே னென்னும், பெருமையிற் பீடுடையதில்" என்னுங் குறளில், கைதூவேன் – கையொழியேன் என்ற பொருளில் வந்திருக்கிறது. ஆகவே தாவாது என்பது துவ்வாது என விகாரப்பட்டுவந்ததாகக் கொள்ளலாம்.

2. கழிதறு கண்மை பேடியிற் றுவ்வாது.

(ப–பொ.) இடமும் காலமும் அறியாது மிக்க தறுகண்மை பேடித்தன்மையின் நீங்கி யொழியாது.

(ப–ரை.) கழி தறுகண்மை – இடத்துக்கும் காலத்துக்கும் ஏற்ற அளவின்மிக்க வீரம், பேடியின் –பேடித்தன்மையின், துவ்வாது – நீங்கி யொழியாது.

தறுகண்மை–அஞ்சாமை, மறம், வீரம்.

பகைவர்மேல் செல்லுதற்கேற்ற காலமும் பகைவரை வெல்லுதற் கேற்ற வசதியும் அறியாது மிக்க தறுகண்மை செய்பவன் தோல்வி யடைவது நிச்சயமாதலால், அத்தறுகண்மை பேடித்தன்மையோ டொக்கும்.

பகைத்திறந் தெரியாது செய்யும் கழிதறுகண்மை எனக் கொள்வதும் பொருந்தும்.

பேடித்தன்மையை, "தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை, வாளாண்மை போலக் கெடும்" என்றும் "பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவையகத், தஞ்சு மவன்கற்ற நூல்" (திருக்குறள்) என்றும் வருவனவற்றால் அறியலாம்.

3. நாணில் வாழ்க்கை பசித்தலிற் றுவ்வாது.

(ப–பொ.) நாணழிந் துண்டுவாழும் வாழ்க்கை பசித்தலின் நீங்கி யொழியாது.

(ப–ரை.) நாண் இல் வாழ்க்கை – வெட்கங்கெட்டு உண்டுவாழும் உயிர் வாழ்க்கை, பசித்தலின் – பசித்தலாகிய துன்பத்தின், துவ்வாது– நீங்கி யொழியாது.

நாணுவது நல்லோர் தமக்கொவ்வாத காரியத்தைக் கண்டவிடத்து அடையும் வெட்கம்: "கருமத்தால் நாணுதல் நாணு." (திருக்குறள்)

வெட்கங்கெட்டு உயிர்வாழ்தலால் உண்டாகின்ற துன்பம் பசித்தலால் உண்டாகின்ற துன்பத்தின் வேறாயதன்று: அதனோடொத்ததே. துன்ப அளவால் இரண்டும் ஒக்குமாயினும், பசிக்குப் பரிகாரமுண்டு, அழிந்த நாணுக்கு உயிர்விடுவதன்றி வேறு பரிகாரமில்லை. ஆகவே "உயிரினும் சிறந்தன்று நாணே" என்பது பெறப்படும். படுதலால், "நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால், நாண் துறவார் நாணாள் பவர்" என்பது கருத்தாம்.

4. பேணி யீகை மாற்றலிற் றுவ்வாது.

(ப—பொ.) விருப்பமில்லாத கொடை கொடாமையை நீக்குகையின் ஒழியாது.

(ப-ரை.) பேண் இல்-விருப்பமில்லாத, ஈகை-ஈகையானது, மாற்றலின்-இல்லையென்று மறுத்துரைத்தலுக்கு, துவ்வாது-வேறாக ஒழியாது.

விருப்பத்தோடு கூடிய ஈகையே ஈகையாம்: விருப்பமில்லாத ஈகை ஈயாமையின் வேறாகாது; அதனோடொக்கும் என்பதாம்.

மாற்றல்-கொடாது மறுத்தல்.

A civil denial is better than a rude grant.

5. செய்யாமை மேற்கோள் சிதடியிற் றுவ்வாது.

(ப—பொ.) செய்யத்தகாதனவற்றை மேற்கொண்டு செய்யத் தொடங்குவது மையற்றன்மையின் நீங்கி யொழியாது.

(ப—ரை.) செய்யாமை — தாம் செய்யத்தகாத காரியங்களை, மேற்கோள்—செய்வோமென்று மேற்கொள்வது, சிதடியின் — மூடத்தன்மையின், துவ்வாது—நீங்கி யொழியாது.

செய்யத்தகாத காரியங்களைச் செய்வதாக மேற்கொண்டு தொடங்குவது மூடத்தன்மையின் வேறாகாது.

"செய்தக்க வல்ல செயக்கெடும்: செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்."
"பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்."—திருக்குறள்.

சிதடி—(சிதடு—பேதைமை)—அறிவிலி. "சிக்கர் சிதடர்" எனச் சிறுபஞ்சமூலத்தில் வருகின்றது.

6. பொய் வேளாண்மை புலைமையிற் றுவ்வாது.

(ப—பொ.) பொய்பட்ட உபகாரம் புலைமையின் நீங்கி யொழியாது.

(ப—ரை.) பொய் வேளாண்மை—விருப்பமில்லாவிட்டாலும் விருப்பமுடையவர்போல் செய்யும் ஈகையானது, புலைமையின்—நீசத்தன்மையின், துவ்வாது-நீங்கி யொழியாது.

புலைமை- கீழோராது தன்மை—இழிவு.

மனப்பூர்வமாய்ச் செய்யாத உபகாரம் கீழோராது தன்மையின் வேறுகாது. பிரதிஷ்டைக்கு உபகாரம் செய்வோர் நீசர்க்குச் சமானமாவர்.

"புலையிற் றுவ்வாது"—பாடபேதம்.

7. கொண்டுகண் மாறல் கொடுமையிற் றுவ்வாது.

(ப—பொ.) ஒருவனை ஒருவன் நட்பாகக்கொண்டுவைத்துக் கண்ணோட்டத்தை மாறுதல் கொடுமையின் நீங்கி யொழியாது.

(ப—ரை.) கொண்டு — ஒருவரை ஒருவர் நட்பாகக்கொண்டு, கண் மாறல்-பின்பு அவரிடத்துக் கண்ணோட்டம் ஒழிதல், கொடுமையின்—அவருக்குக் கொடுமை செய்தலின், துவ்வாது—நீங்கி யொழியாது.

கண்ணோட்டம்—தன்னோடு பழகினவரைக் கண்டால் அவர் கூறியவற்றை மறுக்கமாட்டாமை: இஃது அவர்மேல் கண் சென்றவழி நிகழ்வதாகலின் அப்பெயர் பெற்றது: தாட்சண்ணியம்.

ஒருவனோடு சிநேகம் பண்ணிப் பின்பு அவனிடம் தாட்சண்ணியம் காட்டாதவர் அவனுக்குக் கொடுமைசெய்தவ ரன்றி வேறுகார்.

8. அறிவிலி துணைப்பாடு தனிமையிற் றுவ்வாது.

(ப—பொ.) அறிவில்லாதா னொருவனோடு துணைப்பாடு தனிமையின் நீங்கி யொழியாது.

(ப—ரை.) அறிவிலி — அறிவில்லாதவனை, துணைப்பாடு — ஒருவன் துணையாகக் கொண்டிருத்தல், தனிமையின் — தனித்திருத்தலின், துவ்வாது—நீங்கி யொழியாது.

அறிவில்லாதவனைத் துணையாகக்கொண்டிருப்பது தனித்திருப்பதற்குச் சமானமேயன்றி வேறுகாது. ஆகவே அறிவில்லாதவனைத் துணைக்கோடல் வேண்டா. சிற்றினம் சேராமல் பெரியாரைத் துணைக்கொள்க. என்பதாம்.

"துணைநல மாக்கந் தரூம்"—திருக்குறள்.

9. இழிவுடை மூப்புக் கதத்திற் றுவ்வாது.

(ப—பொ.) இழிவினையுடைய மூப்புப் பிறர் வெறுத்து வெருளும் வெகுட்சியின் நீங்கி யொழியாது.

"இளிவரவினையடைய மூப்பு" "பிறரைவெறுத்து" — பாட பேதம்.

(ப—ரை.) இழிவு உடை மூப்பு – இழிவோடுகூடிய மூப்பு, கதத்தின்–கோபத்தின், துவ்வாது–நீங்கி யொழியாது.

கோபம் பிறரால் வெறுக்கத்தக்கதே: இழிவுடை மூப்பும் பிறரால் வெறுக்கத்தக்கதே. ஆகவே இரண்டையும் ஒழித்தல் வேண்டும். நல்லறம் நல்லொழுக்கம் உடையோர் மூப்புவந்தவிடத்தும் கௌரவ குணங்கள் வாய்ந்திருப்பர். அங்ஙனமான மூப்பு எல்லாராலும் போற் றப்படுவதாகும்.

" மறத்தல் வெகுளியை யார்மாட்டும். தீய
பிறத்தல் அதனான் வரும்."—திருக்குறள்.

10. தானோ ரின்புறல் தனிமையிற் றுவ்வாது.

(ப—பொ.) தானே யொருவன் இன்புறுதல் வறுமையின் நீங்கி யொழியாது.

(ப—ரை.) ஓர்தான் – ஒருவன்தான் மாத்திரமே, இன்புறல் – இன் புற்றிருப்பது, தனிமையின் துவ்வாது–வறுமையின் நீங்கியொழியாது.

பொருளுடையவனாய் எவர்க்கும் உதவாமல் தான் மாத்திரமே இன்புற்றிருப்பவன் பொருளில்லாமையால் தனித்துண்ணும் தரித்திர னுக்குச் சமானமாவதன்றி வேறாகான்.

ஒன்றுமில்லாதவன் இரந்துபெற்றதைத் தனியாக உண்பான்: ஆதலால் அவன் வறுமையைத் தனிமையென்று உபசரித்தார்.

" இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்."—திருக்குறள்.



# V. அல்ல பத்து

1. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
நீரறிந் தொழுகாதாள் தார மல்லள்

(ப-பொ.) ஆர்கலியாற் சூழப்பட்ட உலகத்து மக்கட் கெல்லாம் கொழுநனது குணமறிந் தொழுகாதாள் மனையா ளல்லள்.

(ப-ரை.) ஆர்கலி உலகத்து—கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட்கு எல்லாம்—மனிதர் எல்லார்க்கும், நீர் அறிந்து—புருஷனுடைய குணத்தை அறிந்து, ஒழுகாதாள்—அதற்கேற்றபடி நடவாதவள், தாரம் அல்லள்—மனைவியாகாள்.

நீர்—நீர்மை.

"கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி" யாகையால், கணவனுடைய குணவிசேடங்களை யறிந்து தக்கபடி நடவாதவள் மனைவி யென்கிற பெயருக்கு உரியவளாகாள்.

2. தாரமா ணாதது வாழ்க்கை யன்று.

(ப-பொ.) மனையாள் மாட்சிமைப்படாத மனைவாழ்க்கை மனைவாழ்க்கை யன்று.

(ப-ரை.) தாரம் மாணாதது—மனையாள் மாட்சிமையுடையவளாகப் பெறாத இல்வாழ்க்கை, வாழ்க்கை அன்று—இல்வாழ்க்கை என்னத் தக்க தன்று.

மனையாள் மாட்சிமையுடையவளாகப் பெற்ற இல்வாழ்க்கையே இல்வாழ்க்கை யென்று சிறப்பித்துச் சொல்லத்தக்கதாம்.

"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்."—திருக்குறள்.

மனையாளுக்கு மாட்சியாவது நற்குண நற்செயல்கள். நற்குணங் களாவன: துறவிகளை ஆசரித்தல், விருந்தினரை உபசரித்தல், ஏழை களிடத்து அருளுடைமை முதலியன. நற்செய்கைகளாவன: வாழ்க் கைக்கு வேண்டும் பொருள்களைச் சேகரித்தல், உணவைப் பாகமாக அமைக்குந் திறமை, ஒப்புரவு முதலியன.

3 ஈரமில் லாதது கிளைநட் பன்று.

(ப—பொ.) மனத்தின்கண் ஈரமில்லாதது கிளையுமன்று நட்புமன்று.

(ப—ரை.) ஈரம் இல்லாதது—மனத்தின்கண் அன்பில்லாதது, கிளை (அன்று)—சுற்றமுமன்று; நட்பு அன்று—சிநேகமும் அன்று.

உறவினர்க்கும் நட்பினர்க்கும் அன்புடைமை உரிய லக்ஷணம். உள்ளன்பிலாதார் சுற்றத்தாருமாகார், நட்பினரும் ஆகார் என்பதாம்.

"விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்."

"அழிவந்த செய்யினும் அன்பறார், அன்பின்
வழிவந்த கேண்மை யவர்."—திருக்குறள்.

4. சோராக் கையன் சொன்மலை யல்லன்.

(ப—பொ.) பிறர்க்கு ஒன்றை உதவாத கையையுடையோன் புகழைத் தாங்கமாட்டான்.

சோர்தல்—நெகிழ்தல். சோராக்கையன்—கைநெகிழ்ச்சி யில்லாதவன் — ஒன்றுங் கொடாதவன். சொல் — புகழ். சொன்மலை — மலை போன்ற புகழ்: மிக்க புகழ்: மிக்க புகழுடையவன்.

(ப—ரை.) சோரா(த)கையன்—பிறர்க்கு ஒன்றுங் கொடாதவன், சொன்மலை அல்லன்—மலைபோன்ற புகழை உடையவனாகான்.

"உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ்."—திருக்குறள்.

'சோரக் கையன்' என்ற பாடத்தைக் களவுசெய்யும் கையையுடையவன் புகழுக் குரியவ னாகான் எனப் பொருத்துகின்றனர். சோரம்—களவு, கை—ஒழுக்கம்; சோரக் கையன்—களவொழுக்க முள்ளவன்.

5. நேரா நெஞ்சத்தோன் நட்டோ னல்லன்.

(ப—பொ.) வேறுய் உடன்படாத நெஞ்சத்தோன் நட்டோனல்லன்.

(ப—ரை.) நேரா—ஒற்றுமைப் படாத, நெஞ்சத்தோன்—மனத்தையுடையவன், நட்டோன் அல்லன்—சிநேகன் ஆகான்.

மனவொற்றுமை யில்லாதவன் சிநேகத்துக்கு உரியவ னாகான்

"மனத்தி னமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினால் தேறற்பாற் றன்று"

"புணர்ச்சி பழகுதல் வேண்டா. உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்."—திருக்குறள்.

6. நேராமற் கற்றது கல்வி யன்று.

(ப—பொ.) கற்பிக்கும் ஆசிரியனுக்கு ஒன்றைக் கொடாது கற்குமது கல்வியன்று.

(ப—ரை.) நேராமல்—ஒன்றுங் கொடாமல், கற்றது—ஓ ராசிரிய னிடத்தில் கற்றது, கல்வி அன்று—கல்வியாகாது.

கற்பிக்கும் ஆசிரியனுக்குப் பொருள் கொடாமல் கற்றது கல்வி யென்னும் பெயர்க்கு உரியதாகாது.

"நேராமை"—"தேராமை"—பாடபேதம். 'தேராமைக் கற்றது' என்ற பாடத்துக்கு, உண்மையான பொருளைத் தெரியாமல் கற்றது கல்வி என்கிற கணக்கில் சேர்ந்ததாகாது என்று பொருள் கொள்வது.

7. வாழாமல் வருந்தியது வருத்த மன்று.

(ப—பொ.) தன்னுயிர் வாழாமை வருந்தியது வருத்த மன்று.

(ப—ரை.) வாழாமல்—தன் உயிர் நன்கு வாழ்வதை வேண்டாமல் பிறவுயிர்கள் இன்புற்று வாழ்வதை வேண்டி, வருந்தியது—ஒருவன் வருந்தலுற்றது, வருத்தம் அன்று—வருத்தத்திற் சேர்ந்த தாகாது.

"தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம், வெங்குறை தீர்க் கிற்பார் விழுமியோர்" ஆதலால், சமுதாய நன்மையை வேண்டி உழைப்பவர்க்கு அதிலுள்ள வருத்தம் வருத்தமாகத் தோன்றாது.

8. அறத்தாற்றி னீயாத தீகை யன்று.

(ப—பொ.) அறத்தின் நெறியின் ஈயாதது ஈகையன்று.

(ப—ரை.) அறத்தாற்றின் ஈயாதது—தருமமார்க்கத்திலே கொடாதது, ஈகை அன்று—ஈகை என்று சொல்லத் தக்கதாகாது.

அறத்தாற்றின் ஈதலாவது பாத்திரமறிந்து கொடுத்தல். ஈகையின் இலக்கணமும் அதுவே.

9. திறத்தாற்றி னோலா ததுநோன் பன்று

(ப—பொ.) தன் குலத்திற்கும் நிலைமைக்கும் தக நோலா தது தவமன்று.

நோற்றல்—விரதங்காத்தல்.

(ப—ரை.) திறத்து ஆற்றின்—தத்தம் கூறுபாட்டிற் குரிய வழியில், நோலாதது—காவாத விரதம், நோன்பு அன்று—விரதம் என்கிற கணக்கில் சேர்ந்ததன்று.

வருணாச்சிரமத்திற்கு ஏற்ற வழியிலே அனுஷ்டிக்கும் விரதமே விரதமாம்: ஏலாத வழியிலே அனுஷ்டிப்பது விரதமாகாது.

10. மறுபிறப் பறியா ததுமூப் பன்று.

(ப—பொ.) மறுபிறப்பை யறிந்து அறத்தின்வழி ஒழுகாதே மூத்த மூப்பு மூப்பன்று.

(ப—ரை.) மறுபிறப்பு—மறுபிறப்பு நன்கு நடத்தற்குரிய வொழுக்கங்களை, அறியாதது—ஒருவன் அறியாமலே அடைந்த மூப்பானது, மூப்பு அன்று—மூப்பு என்னும் கணக்கிலே சேர்ந்ததாகாது.

"இறந்த பிறப்பிற் றாஞ் செய்த வினையைப்
பிறந்த பிறப்பா லறிக.—பிறந்திருந்து
செய்யும் வினையா லறிக இனிப்பிறந்
தெய்தும் வினையின் பயன்."

"அம்மைத் தாஞ்செய்த அறத்தின் வருபயனை
இம்மைத்துய்த் தின்புறு கின்றவர்—உம்மைக்
கறஞ்செய்யா தைம்புலனும் ஆற்றுதல் நல்லாக்
கறந்துண்டல்ல் தோம்பாமை யாம்."

இவ்வறநெறிச்சார வெண்பாக்களால் கருத்து நன்கு விளங்கும்.

# VI. இல்லைப் பத்து.

1. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
மக்கட் பேற்றிற் பெறும்பே றில்லை.

(ப—பொ.) ஆர்கலியாற் சூழப்பட்ட உலகத்து மக்கட் கெல்லாம் புதல்வரைப் பெறும் பேற்றிற் பெறும் பேறில்லை.

(ப—ரை.) ஆர்கலி உலகத்து – கடல் சூழ்ந்த உலகத்தில் மக்கட்கெல்லாம் – மனிதர் எல்லாருக்கும், மக்கள் பேற்றின் – புத்திரரைப் பெறுவதைக் காட்டிலும், பெறும்பேறு—பெறத்தக்க பாக்கியம், இல்லை—வேறில்லை.

மக்கட்பேறு—புத்திர பாக்கியம். மக்கட்பேற்றின் – புத்திரபாக்கியம்போல என்றும் பொருள்படும். “பெரும்பேறு” என்று பாடங்கொண்டால், பெரிய பாக்கியம் என்பது பொருள்.

மனிதர் பெறத்தக்க பாக்கியங்களில் புத்திர பாக்கியத்தைக் காட்டிலும் சிறந்தது வேறில்லை.

“பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.”—திருக்குறள்.

மக்களாப் பிறக்கும் பிறவியிற் பெறும்பே றில்லை எனினும் அமையும்.

2. ஒப்புர வறிதலிற் றகுவர வில்லை.

(ப – பொ.) செய்யக்கடவன செய்கையோ டொக்கும் தகுதி இல்லை.

(ப—ரை.) ஒப்புரவறிதலின் – செய்யக்கடவனவற்றைச் செய்வது போல், தகுவரவு—தக்க செய்கை, இல்லை—வேறில்லை.

ஒப்புரவு—உலகநடை, ஒப்புரவறிதல் – உலக நடையினை அறிந்து செய்தல். உலகநடை தர்ம சாஸ்திரங்களில் கூறப்படுவதின்றி அவரவர் தாமே அறிந்துசெய்யும் தன்மையது. ஆதலால் ஒப்புரவு என்பது அவரவர் தவிர்க்கலாகாமல் செய்யக்கடவனவான செய்கைகள் என்கிற பொருள் பெற்றிருக்கிறது: கடப்பாடுகள் என்பதாம். தகுவரவு – தகுதி: தக்க செய்கை.

தத்தம் கடப்பாடுகளைச் செய்வதுபோல் சிறந்த செய்கை வேறில்லை.

“புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற.”—திருக்குறள்.

3. வாய்ப்புடை விழைச்சி னல்விழைச் சில்லை.

(ப—பொ.) மக்கட்பேறு வாய்த்த கலவிபோலும் கலவியின் நல்ல தில்லை.

(ப—ரை.) வாய்ப்பு உடை (ய)—மக்கட்பேறு வாய்த்த, விழைச் சின்—இணைவிழைச்சு (கலவி) போல், நல் விழைச்சு இல்லை—கலவியின் நல்ல தில்லை.

"வாய்ப்புடை வழக்கின் நல்வழக்கில்லை" என்ற பாடம் கொண்டு, சாக்ஷி முதலியன வாய்த்துள்ள வழக்கைக் காட்டிலும் நல்ல வழக்கு வேறில்லை என்றும் உரைப்பார்.

வாய்ப்பு—பேறு. விழைச்சு—இணைவிழைச்சு—கலவி.
புத்திர பாக்கியம் பெறுதலான கலவியே கலவி.

4. வாயா விழைச்சிற் றீவிழைச் சில்லை.

(ப—பொ.) மக்கட்பேற்றின் பொருட்டன்றிக் கலக்கும் கலவிபோலத் தீயதில்லை.

(ப—ரை.) வாயா விழைச்சின்—புத்திர பாக்கியத்தின் பொருட்டன் றிச் சிற்றின்பங் கருதிக் கலக்கும் கலவிபோல், தீவிழைச்சு—தீமையான கலவி, இல்லை—வேறில்லை.

"வாயா வழக்கிற் றீவழக்கில்லை"—பாடபேதம். வாயா—வா யாத, பொருந்தாத. சாக்ஷி முதலியன நன்கு பொருந்தாத வியவகாரத் தைப்போல் கெட்ட வியவகாரம் வேறில்லை.

முன் வாக்கியத்தில் கூறினதை வற்புறுத்துமாறு இந்த வாக்கியத் தை எதிர்மறை முகத்தால் கூறினர்.

5. இயைவது கரத்தலிற் கொடுமை யில்லை.

(ப—பொ.) தான் பிறர்க்குக் கொடுக்க இயலும் பொருளை இல்லையென்று கரக்கும் கரப்பிற் கொடுமை யில்லை.

(ப—ரை.) இயைவது—தனக்குக் கூடுமான பொருளை, கரத்தலின்—இரந்தவர்க்கு இல்லை யென்று ஒளித்தலைப்போல், கொடுமை—கொடு மையான செய்கை, இல்லை—வேறில்லை.

"இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்."

"இரவுள்ள உள்ளம் உருகும், கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும்."—திருக்குறள்.

6. உணர்வில ளுதலிற் சாக்கா டில்லை.

(ப—பொ.) ஒருவற்கு அறிவின்மையோ டொக்கும் சாக்கா டில்லை.

(ப—ரை.) உணர்விலன் ஆதலின்—அறிவிலான் ஆதல்போல, சாக்காடு—மரணம், இல்லை—ஒருவனுக்கு வேறில்லை.

அறிவில்லாதவன் செத்த பிணத்தை ஒப்பான்.

" உரையில ளுதலின் " என்ற பாடத்துக்குப் புகழில்லாதவனு யிருத்தலைக் காட்டிலும் என்பது பொருள்.

" வசையொழிய வாழ்வாரே வாழ்வார். இசையொழிய
வாழ்வாரே வாழா தவர். "—திருக்குறள்.

7. நசையிற் பெரியதோர் நல்குர வில்லை.

(ப—பொ.) ஆசையின் மிக்கதொரு வறுமை இல்லை.

(ப—ரை.) நசையின்—ஆசையினும், பெரியது – மிக்கதாகிய, ஓர்—ஒரு, நல்குரவு—தரித்திரம், இல்லை—வேறில்லை.

" அதிக ஆசை மிகு தரித்திரம் " என்றது ஓர் பழமொழி.

நல்குரவாவது நுகரப்படும் பொருள் ஒன்றுமில்லாமை. பொருள்களிடத்து ஆசை கொள்ளும்போது அப்பொருள்களில்லாமையே பெரிய குறைவாகத் தோன்றுதலால், ஆசை வறுமைபோன்ற தாகின்றது. அதனலன்றே திருவள்ளுவரும் " நல்குர வென்னு நசை " என்றார்.

" வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்ப தில். "—திருக்குறள்.

8. இசையிற் பெரியதோர் எச்சம் இல்லை.

(ப—பொ.) புகழுடைமையின் மிக்குப் பிறர் பயப்பதோர் ஆக்கம் ஒருவர்க் கில்லை.

எச்சம்—(எஞ்சல் – மிஞ்சல்) – மிஞ்சியிருப்பது : மிச்சமாக இருப்பது. தந்தை முதலியோர் இறக்கும்போது மிச்சமாக வைத்த பொருள். அதை உரையாசிரியர் ' பிறர் பயப்பதோ ராக்கம் ' என்றார் : ஆஸ்தி : செல்வம்.

(ப—ரை.) இசையின்—கீர்த்தியைக் காட்டிலும், பெரியது—சிறந்ததாகிய, ஓர் எச்சம்—ஒப்பற்ற ஆஸ்தி, இல்லை—வேறில்லை

"வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்". (திருக்குறள்).

கீர்த்தியைப்போல் சிறந்த செல்வம் இல்லை.

9. இரத்தலி னூஉங் கிளிவா வில்லை.

(ப—பொ.) இரந்து உயிர்வாழ்தலின் மேல் சிழ்மை இல்லை.

(ப—ரை.) இரத்தலின்—பிச்சையெடுத்து உயிர் வாழ்வதைக் காட்டிலும், ஊங்கு—மேலான, இளிவரவு-இழிவு, இல்லை—வேறில்லை

"ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்
கிரவின் இளிவந்த தில்"—திருக்குறள்.

"இரத்த லின்னூங் கிளிவா வில்லை": "இரத்தலினூங்காம்"—பாடபேதம்.

10. இரப்போர்க் கீதலி னெய்துஞ் சிறப்பில்லை.

(ப—பொ) இரப்போர்க்குக் கொடுப்பதில் மிக்கதாய் எய்தும் மேன்மை இல்லை

"கொடுப்பதின் மிகத் தாம் எய்தும்"—பாடபேதம்.

(ப—ரை.) இரப்போர்க்கு—யாசிப்பவர்க்கு, ஈதலின்-கொடுப்பதைக் காட்டிலும், எய்தும் — ஒருவன் அடைதலான, சிறப்பு — மேன்மை, இல்லை—வேறில்லை.

ஈகைபோல் புகழ்தருவது வேறில்லை என்பதாம்.

"உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ்."—திருக்குறள்.



## VII. பொய்ப்பத்து.



1. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
பேரறிவி னோனினிது வாழாமை பொய்.

(ப—பொ.) ஆர்கலியாற் சூழப்பட்ட உலகத்து எல்லா மக்களுள்ளும், ஒருவன் பேரறிவுடையனாயின் அவன் மனத்தால் இன்புற்றொழுகாமை பொய்.

(ப—ரை.) ஆர்கலி உலகத்து – கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட்கெல்லாம் – மனிதர் எல்லாருள்ளும், பேர் அறிவினோன் – மிக்க அறிவுள்ளவன், இனிது வாழாமை – இன்பமடைந்து வாழாதிருத்தல், பொய் – பொய்யாம்.

மிக்க அறிவுள்ளவன் இனிதுவாழ்வான் என்பது உண்மை.

"எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்."—திருக்குறள்.

2. பெருஞ்சீ ரோன்றன் வெகுளியின்மை பொய்.

(ப—பொ.) பெருஞ் செல்வத்தைப் பெற்றொருவன் வெகுளாமை பொய்.

(ப—ரை.) பெருஞ்சீரோன் – பெருஞ்செல்வம் பெற்றிருப்பவன், வெகுளி இன்மை – கோபியாதிருத்தல், பொய்–பொய்யாம்.

பல காரியங்களையும் பல ஏவலாளரையும் கவனிப்பதில் ஏதாவது தவறு கண்டவிடத்துப் பெருஞ்செல்வர் கோபிப்பது இயல்பு. உலகவியல்பு நோக்கிக் கூறியது.

3. கள்ளுண் போன்சோர் வின்மை பொய்.

(ப—பொ.) கள்ளையுண்டோன் ஒழுக்கஞ் சோர்வின்மை பொய்.

(ப—ரை.) கள் உண்போன் – கள்ளைக் குடிப்பவன், சோர்வு இன்மை – ஒழுக்கம் தளராதிருப்பது, பொய் – பொய்யாம்.

கள்ளுண்பவனுடைய ஒழுக்கம் உறுதியாக இராமல் தளர்வடையும். சோர்வு – "மனமொழி மெய்கள் தன்வயத்தவல்ல வாதல்."

"கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு."—திருக்குறள்.

4. கால மறியாதோன் கையுறல் பொய்.

(ப—பொ.) காலமறிந்து முயலாதோன் கருமமுடிதல் பொய்.

கையுறல்—(கை—செய்கை, கருமம். உறல்—அடைதல், பெறுதல்)—செய்கையின் பலனைப் பெறுதல்.

(ப—ரை.) காலம் அறியாதோன் — ஒரு காரியத்தைச் செய்யலுற்று அதற்குரிய காலத்தை அறியாதவன், கையுறல் — காரியசித்தியடைதல், பொய் — பொய்யாம்.

உரிய காலத்தில் செய்யத்தொடங்கிய காரியம் கைகூடுவது நிச்சயம்.

"அருவினை யென்ப உளவோ கருவியாற்
காலமறிந்து செயின்."—திருக்குறள்.

5. மேல்வர வறியாதோன் தற்காத்தல் பொய்.

(ப—பொ.) எதிர்காலத்து வரும் இடையூ றறியாதான் தனக்கு அரண்செய்து காத்தல் பொய்.

(ப—ரை.) மேல் — இனி, வரவு — வரத்தக்கதை, அறியாதோன் — அறியாதவன், தற்காத்தல் — தன்னைத் தான் பாதுகாத்துக்கொள்ளுதல், பொய் — பொய்யாம்

நல்ல காரியத்துக்கு நாலிடையூறும் வரும்: அவைகளை முன்னுக அறிந்து பரிகாரம் தேடாதவன் தன்னைத்தான் பாதுகாத்துக்கொள்வது இல்லை.

"வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்."—திருக்குறள்.

6. உறுவினை காய்வோன் உயர்வுவேண்டல் பொய்.

(ப—பொ.) மிக்க கருமச் செய்கைக்கு மடிந்திருப்போன் தனக்கு ஆக்கம் வேண்டுதல் பொய்.

"தக்க கருமம்"—பிரதிபேதம்

(ப—ரை.) உறுவினை — மிக்க கருமத்தை, காய்வோன் — செய் யாமல் வெறுப்பவன், உயர்வு வேண்டல் - மேன்மையடைய விரும் புதல், பொய் — பொய்யாம்.

ஆக்கம் — மேன்மேல் உயர்தல்.

உறுவினை என்பதை வினைத்தொகையாகக் கொண்டு, பயன் பெறுதலான காரியம், கைகூடத்தக்க காரியம் என உரைப்பதும் பொருந்தும்.

"உறுவினைக் கயர்வோன்."—பாட பேதம் (அயர்வு — சோர்வு.)

7. சிறுமைநோ ஞுதோன் பெருமைவேண்டல் பொய்.

(ப—பொ.) பிறர்க்குத் தான்செய்யும் பணிவினைப் பொறு தோன் தனக்குப் பெருமை வேண்டுதல் பொய்.

பிறர் தனக்குச் செய்யும் பணிவினைப் பொறுதோன் என்றும் பாடபேதம் உண்டு.

(ப—ரை.) சிறுமை — அடக்கத்தை, நோனுதோன் — அஞ்சரிக்கப் பொறுதவன், பெருமை — பெருமையை, வேண்டல் — வேண்டுதல், பொய் — பொய்யாம்.

நோன்றல்—பொறுத்தல் (இதற்கு எதிர்மறை நோனுமை): "உற்ற நோய் நோன்றல்" (திருக்குறள்) என வருகின்றது.

பெருமையை விரும்புகின்றவன் பிறரிடம் பணிவாக அடங்கி நடப்பான். "பெருமை பெருமித மின்மை" என்றது திருக்குறள்.

8. பெருமைநோ ஞுதோன் சிறுமைவேண்டல் பொய்.

(ப—பொ.) பிறர்க்குத் தான் அரியனும் பெருமை வேண் டாதான் தனக்குச் சிறுமைக்குணம் வேண்டுதல் பொய்.

(ப—ரை.) பெருமை — பிறர் தன்னை அரியனுகக் கொள்ளும் பெருமையை, நோனுதோன் — வேண்டாதவன், சிறுமை — இழி குணத்தை, வேண்டல் — விரும்புதல், பொய் — பொய்யாம்.

பிறர் தன்னை அரியனுக மதித்தலை விரும்பாதவன் இழிகுணத்தை விரும்பான். "பெருமை பெருமிதமின்மை" ஆதலால், பெருமித மில்லாதவன் இழிகுணத்தை விரும்புவதில்லை.

9. பொருணசை வேட்கையோன் முறைசெயல் பொய்.

(ப—பொ.) பொருணசையால் வரும் வேட்கையை உடை யான் முறைசெய்தல் பொய்.

நசை — இச்சை. வேட்கை — ஆசைப்பெருக்கம். முறை — நீதி.

(ப—ரை.) பொருள் நசை — பொருளில் விருப்பத்தால் வரும், வேட்கையோன் — பேராசையுடையவன், முறைசெயல் — நீதியை மேற்கொண்டு நடத்தல், பொய் — பொய்யாம்.

மிக்க பொருளை விரும்பிப் பேராசையுற்றவன் நடுவுநிலைமையில் நின்று நீதியை மேற்கொண்டு நடக்கமாட்டான்.

வேட்கை – பொருள்களின்மேல் தோன்றும் பற்றுள்ளம். இந்தச் சூத்திரம் அரசனைக் கருதியது.

10. வாலிய னல்லாதோன் தவஞ்செய்தல் பொய்.

(ப—பொ.) மனத்தின்கண் தூயனல்லாதோன் தவஞ்செய்தல் பொய்.

(ப—ரை.) வாலியன் அல்லாதோன் – மனத்தில் பரிசுத்தம் இல்லாதவன், தவம் செய்தல் – தவத்தைச் செய்தல், பொய் – பொய்யாம்

வாலியன் – (வால் – சுத்தி, இ – சாரியை) சுத்தியுள்ளவன் – பரிசுத்தன்.

சுத்தமனமுள்ளவனே தவஞ்செய்தற்கு உரியவன்.

வாலியனல்லாதோன் என்பது "மனத்தது மாசாக மாண்டார் நீராடி மறைந்தொழுகு மாந்தர்" (திருக்குறள்) என்பதனால் விளங்கும்



## VIII. எளிய பத்து.



1. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
புகழ்வெய் யோர்க்குப் புத்தே ளுலகெளிது.

(ப—பொ.) ஆர்கலியாற் சூழப்பட்ட உலகத்து மக்களெல்லாருள்ளும், ஒருவர்க்குப் புகழ் விரும்பின் கடவுளர் வாழு நாடு பெறுதல் எளிது.

(ப—ரை.) ஆர்கலி உலகத்து – கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட்கெல்லாம்—மக்கள் எல்லாருள்ளும், புகழ்–கீர்த்தியை, வெய்யோர்க்கு—விரும்பினோர்க்கு, புத்தேள்நாடு—தேவலோக மடைதல், எளிது – எளிதாம்.

புகழை விரும்பி அறஞ்செய்தாரைத் தேவர்கள் தாமே வந்து உபசரித் தழைத்துப்போவர். ஆதலால் அறஞ்செய்தார் சுவர்க்கம் புகுதல் எளிதே என்பதாம்.

" புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி
எய்துப வென்பதம் செய்வினை முடித்து."—புறம்.

" நிலவரை நீள்புக ழாற்றின் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு."—திருக்குறள்.

2. உறழ்வெய் யோருக் குறுசெரு வெளிது.

(ப—பொ.) பிறரொடு கலகம் விரும்புவார்க்கு மிக்க செரு எளிது.

(ப—ரை.) உறழ்—கலகத்தை, வெய்யோருக்கு—விரும்புவோருக்கு, உறு செரு—மிக்க போர், எளிது—எளிதாம்.

கலகப்பிரியருக்குப் பெரும்போர் எளிதில் நேரும் என்பதாம்.
உறழ்—முதனிலைத்தொழிற்பெயர். உறு — உரிச்சொல்.

3. ஈரம்வெய் யோர்க்கு நசைகொடை யெளிது.

(ப—பொ.) மனத்துள் ஈரத்தை விரும்பியிருப்பார்க்குப் பிறனொருவன் கேட்கக் கொடுத்தல் எளிது.

(ப—ரை.) ஈரம்—அன்புடைமையை, வெய்யோர்க்கு—விரும்பியிருப் பார்க்கு, நசை கொடை—பிறருக்கு விருப்பமாகிய பொருளைக் கொடுப் பது, எளிது—எளிதாம்.

பிறரிடம் அன்புள்ளவர் அவர் எதை விரும்பிக் கேட்டாலும் எளி திற் கொடுப்பர்.

" ஈரமுடைமை ஈகையி னறிப" (II—பத்து) என இந்நூலில் வருகின்றது.

" அன்பிலா ரெல்லாம் தமக்குரியர்: அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு."—திருக்குறள்.

" நாமம் வெய்யோர்க்கு நசைகொடை எளிது "—" நாமம் வெய் யோர்க்கு நசைகுலை வெளிது."—பாடபேதங்கள்.

4. குறளைவெய் யோர்க்கு மறைவிரி யெளிது.

(ப—பொ.) குறளைச் சொல்லை விரும்புவார்க்கு ஒருவன் மறையச்செய்த தொன்றனை வெளிப்படுத்திப் பிறரை யறிவித் தல் எளிது.

(ப—ரை.) குறளை—கோட்சொல்லை, வெய்யோர்க்கு – விரும்பினோருக்கு, மறை விரி—இரகசியத்தை வெளிப்படுத்தல், எளிது—எளிதாம்.

கோட்சொல்லும் இயல்புடையோர் பிறருடைய இரகசியங்களை எளிதில் வெளியிடுவர்.

குறளை—புறங்கூறுதல். மறை—மறைவானது : இரகசியம். விரி—(விரித்தல்—) முதனிலைத்தொழிற்பெயர் : பரப்புதல் : பலர் அறியச் செய்தல்.

5. துன்பம் வெய்யோர்க் கின்ப மெளிது.

(ப—பொ.) ஒன்றனை முயன்றுவரும் துன்பத்தை வெறாதார்க்கு இன்பமெய்தல் எளிது.

(ப—ரை.) துன்பம்—ஒருகாரியத்தை மேற்கொண்டு முயற்சி செய்வதால் உண்டாகும் துன்பத்தை, வெய்யோர்க்கு – விரும்பிப் பொறுத்தவருக்கு, இன்பம் – அக்காரியம் நன்கு முடிதலால் உண்டாகும் இன்பம், எளிது—எளிதாம்.

ஒருகாரியத்தைச் செய்வதில் உண்டாகும் துன்பத்தை வெறுக்காதவர் அந்தக் காரியம் கடைபோகக்கண்டு இன்ப மடைவர்.

"இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்ப முறுத லிலன்."—திருக்குறள்.

6. இன்பம்வெய் யோர்க்குத் துன்ப மெளிது.

(ப—பொ.) முயன்றுவரும் தன்மையால் வரும இன்பத்தை விரும்புவார்க்குப் பொருளில்லாமையால் வரும் துன்பம் எளிது.

(ப—ரை.) இன்பம் வெய்யோர்க்கு – ஒருகாரியத்தை மேலிட்டுக் கொண்டு முயற்சிசெய்தலால் உண்டாகும் இன்பத்தை விரும்புவாருக்கு, துன்பம்—வறுமை முதலியவற்றால் உண்டாகும் துன்பம், எளிது—எளிதாம்.

முயற்சியால் உண்டாகும் இன்பத்தை விரும்புவோருக்கு வறுமையால் உண்டாகும் துன்பம் ஒருபொருட்டாகத் தோன்றாது.

7. உண்டி வெய்யோர்க் குறு பிணி யெளிது.

(ப—பொ.) உண்டி மிகவிரும்பினோர்க்கு மிக்க பிணி எளிது.

(ப—ரை.) உண்டி—உணவை, வெய்யோர்க்கு—மிகுதியும் விரும்பினோர்க்கு, உறு பிணி—மிக்க நோய், எளிது—எளிதில் வந்தடையும்.

"மீதூண் விரும்பேல்" என்பதாம்.

"இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய்"

"தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்"—திருக்குறள்.

8. பெண்டிர்வெய் யோர்க்குப படுபழி யெளிது

(ப—பொ.) பெண்டிரை மிக விரும்பினோர்க்கு உண்டாகும் பழி எளிது

"பெண்டிரை விரும்பி அவா சொல்வழி வருவார்கருப் படும்பழி எளிது"—பிரதிபேதம்.

(ப—ரை.) பெண்டிா—பெண்டிரை, வெய்யோாக்கு – மிக விரும்பினோருக்கு, படு—உண்டாகும், பழி—நிந்தை, எளிது—எளிதாம்

காமமிக்கவா எளிதில் நிந்தையடைவா காமமிகுதியால் பெண வழிச்சேறலும் பிறன்மனை விழைதலும் ஆகிய ஒழுக்கத்தவறுகள் உண்டாகும்: உண்டானல் உலகத்தில் அபவாதம் மிகும். "மனை விழைவார் மாண்பய னெய்தா"

"எளிதென இல்லிறப்பான் எய்தும் எஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி"—திருககுறள்

9. பாரம்வெய் யோர்க்குப பாத்தூ ணெளிது

(ப—பொ) பிறா பாரத்தைத் தாங்குதலை விரும்புவார்க்குப பகுத்துண்டல் எளிது

"பெருமையை விரும்பினோர்க்கு" என்றும் பிரதிபேதம் உண்டு

(ப—ரை) பாரம் வெயயோர்க்கு – பிறருடைய பாரத்தைத் தாம் தாங்க விரும்பினோருககு, பாத்தூண் – தென்புலத்தார் தெயவம் விருந்து ஒககல்களுக்குப் பகுததுண்ணுதல், எளிது—எளிதாம்

பாத்தூண்—(பாத்து + ஊண். பாத்து – பகுத்து). பாத்து என்பதில் பகு என்பதன் மரூஉவாகிய பா பகுதி.

" தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்"—நன்னெறி.

ஆதலால் பகுத்துண்டல் அவர்க்கு எளிதென்பதாம்.

10. சார்பி லோர்க்குக் கூறுகொலை யெளிது.

(ப—பொ.) நன்னட்பைப் பாராதோர்க்குப் பொருந்திய கொலைத்தொழில் செய்தல் எளிது.

"சால்பில்லோருக் குறுகொலையெளிது" என்று பாடங்கொண்டு "அமைந்த குணம் இல்லாதார்க்கு மிகவும் உயிர்க்கொலை எளிது" என்றுரைக்கின்றது ஒரு பிரதி.

(ப—ரை) சார்பு இலோருக்கு-நல்ல நட்பாகிய சார்பு இல்லாதவர்க்கு, உறு கொலை—பொருந்திய கொலைத்தொழில் செய்தல், எளிது—எளிதாம்.

"மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும், இனந்தூய்மை தூவா வரும்" (திருக்குறள்) ஆதலால், நற்சார்பு இல்லார் கொலை முதலிய தீச்செயல்களை எளிதிற் செய்வர்.



# IX நல்கூர்ந்த பத்து.



1 ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
முறையி லரசனாடு நல்கூர்ந் தன்று

(ப—பொ) ஆர்கலியாற் சூழப்பட்ட உலகத்துள் எல்லா மக்கட்கும், முறைமை செய்யா அரசனாடு வறுமையுறும்.

(ப—ரை) ஆர்கலி உலகத்து—கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட் கெல்லாம் – மனிதரெல்லார்க்கும், முறை இல் – நீதி முறை இல்லாத, அரசன் நாடு—அரசனது நாடானது, நல்கூர்ந்தன்று—வறுமை யுடையதாம்.

" இயல்புளிக் கோலோச்சும் மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு."

" முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்."

" நாடொறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறு நாடு கெடும்."—திருக்குறள்.

2. மிகமூத் தோன்காம நல்கூர்ந் தன்று.

(ப—பொ.) மிகமூத்தான் காமத்திற் றுய்க்கும் நுகர்ச்சி வறுமையுறும்.

(ப—ரை.) மிகமூத்தோன்—வயது மிகவும் மூத்தவன், காமம்—நுகரும் காமவின்பம், நல்கூர்ந்தன்று—வறுமையுடையதாம்.

யௌவனன் நுகரும் காமவின்பம்போல், வயோதிகன் நுகரும் காமவின்பம் சிறவாது.

3. செற்றுட னுறைவோனைச் சேர்தனல் கூர்ந்தன்று.

(ப—பொ.) தன்னைச் செறுத்தொழுகுவானைச் சென்றடைதல் வறுமையுறும்.

(ப—ரை.) செற்று—உட்பகை கொண்டு, உடன் உறைவோனை—உடன் வசிப்பவனை, சேர்தல்—நண்பனாகக்கொண்டு ஒழுகுதல், நல்கூர்ந்தன்று—வறுமை யுடையதாம்.

செற்று (செறு—கோபி, செறு)—கோபித்து—பகைகொண்டு.

உட்பகை யுடையாரை உண்மை நண்பராகக் கொண்டொழுகுதல் கேட்டை உண்டாக்கும்.

"உடன்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போ டுடனுறைந் தற்று."—திருக்குறள்.

4. பிணிகிடந் தோன்பெற்ற வின்பநல் கூர்ந்தன்று.

(ப—பொ.) பிணிபட்ட உடம்பை யுடையான் நுகரும் காமவின்பம் வறுமையுறும்.

"உடம்பை யுடையா னுகக்கும்"—பிரதிபேதம்.

(ப—ரை.) பிணிகிடந்தோன்—வியாதியடைந்து மெலிந்த சரீரத்தை யுடையவன், பெற்ற இன்பம்—நுகரும் காமவின்பம், நல்கூர்ந்தன்று—வறுமையுடையதாம்.

நோயாளி நுகரும் காமவின்பம் கேட்டைத் தருவதாம்.

5. தற்போற் றுவழிப் புலவிநல் கூர்ந்தன்று.

(ப—பொ.) தன்மேல் அன்பால் போற்றுதார் திறத்துப் புலக்கும் புலவி வறுமையுறும்.

(ப—ரை.) தன் போற்றுவழி—தன்மேல் அன்புள்ளவனுயத் தன்னை ஒருவன் பாதுகாவாத விடத்து, புலவி—பிணங்குதல், நல்கூர்ந்தன்று—வறுமையுடையதாம்.

அன்புடையார்மேல் பிணக்கங்கொண்டால் அவர் பரிகாரம் செய்வர்: அன்பிலார்மேல் கொண்டால் அவர் பரிகாரம் செய்யார். ஆதலால் அப்பிணக்கு ஒருவருக்குக் கேட்டை உண்டாக்கும்.

அன்புடையாரிடம் கொண்ட புலவியால் இன்பம் சிறக்கும்; அன்பிலாரிடம் அதனுல் இன்பம் சிறவாது. "நீரும் நிழல தினிதே புலவியும், வீழுநர் கண்ணே இனிது" (திருக்குறள்) என்று கொள்வதுமாம்.

6. முதிர்வுடை யோன்மேனி யணிநல்கூர்ந் தன்று.

(ப—பொ.) மூத்த உடம்பினை யுடையான் அணியுமணி வறுமையுறும்.

(ப—ரை.) முதிர்வு உடையோன்-கிழப்பருவமடைந்தவன், மேனி அணி – உடம்பில் அணியும் ஆபரணம், நல்கூர்ந்தன்று – அழகு செய்யாது.

யௌவனர் அணியும் ஆபரணம் செய்கை யழகைத் தந்து சிறக்கும்: வயோதிகர் அணியும் ஆபரணம் சிறவாமல் விகாரத்தை உண்டாக்கும்.

7. சொற்செல் லாவழிச் சொலவுநல் கூர்ந்தன்று.

(ப—பொ.) தன்சொல் செல்லாவிடத்துச் சொல்லிய சொல் வறுமையுறும்.

(ப—ரை.) சொல்—தன்சொல், செல்லாவழி—செல்லாத விடத்து, சொலவு—ஒன்றைச் சொல்லுதல், நல்கூர்ந்தன்று—பயனற்றதாம்.

சொற் செல்லாவழி – தன்சொல்லை ஏற்பாரில்லாத விடத்து. சொலவு-(என்பதில் அசாரியை) தொழிற் பெயர்.

தன்வார்த்தையை மதியாதவரிடம் சொல்லிக்கொண்ட குறை பயன்படாது என்பதாம்.

8. அகம்வறி யோனண்ணா னல்கூர்ந் தன்று.

(ப—பொ.) மனத்தில் நன்மையின்றி வறியோனொருவனைச் சென்று நண்ணுதல் வறுமையுறும்.

(ப—ரை.) அகம் வறியோன்—மனத்தில் நன்மையாதொன்றும் இல்லாதவனை, நண்ணல்-சென்றடைதல், நல்கூர்ந்தன்று—வறுமை யுடையதாம்.

அகம் வறியோன்—மனத்தில் ஒன்றுமில்லாதவன்—அன்பு அருள் முதலிய நன்மை யாதொன்று மின்றிச் சூனியமான மனத்தையுடையவன்—அறிவில்லாதவன். நண்ணல்—கிட்டுதல்.

"அகமறியோன்" என்ற பாடத்துக்கு, தன்மனத்தின் இயல்பை அறியாதவன் என்பது பொருள்.

9. உட்கில் வழிச்சினை நல்கூர்ந் தன்று.

(ப—பொ.) மதியாதார்முன் வெகுளும் வெகுட்சி வறுமையுறும்.

உட்கு—அச்சம்: பிறர் அஞ்சத்தக்க மதிப்பு.

(ப—ரை.) உட்கு இல்வழி—மதிப்பில்லாவிடத்து, சினம்—கொள்ளும் கோபம், நல்கூர்ந்தன்று—பயனற்றதாம்.

மதிப்பில்லாதவன் பிறர்மேல் கொண்ட கோபம் பயனற்றதாகும்.

10. நட்பில் வழிச்சேறல் நல்கூர்ந் தன்று.

(ப—பொ.) தன்னோடு நட்பில்லாதார் மாட்டு ஒன்றனை நச்சிய நசை வறுமையுறும்.

(ப—ரை.) நட்பு இல்வழி—ஒருவரோடு நட்பு இல்லாத விடத்து, சேறல்—(ஒருதவியை வேண்டி) அவரை அடைதல், நல்கூர்ந்தன்று—பயனற்றதாம்.

சினேக மில்லாதவரிடம் தான் விரும்பிய ஒன்றைப் பெறுமாறு செல்வது பயனற்றதாம்.

"நட்பில் வழிச் சொலவு"—பாடபேதம்.



# X. தண்டாப் பத்து.

1. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓங்கல் வேண்டுவோன் உயர்மொழி தண்டான்.

(ப—பொ.) ஆர்கலியாற் சூழப்பட்ட உலகத்து எல்லா மக்களுள்ளும், உயர்வு வேண்டுவோன் பிறரை உயர்த்துச் சொல்லும் மொழிகளை மாறான்.

(ப—ரை.) ஆர்கலி உலகத்து—கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட் கெல்லாம்—எல்லா மக்களுள்ளும், ஓங்கல்—மேன்மை யடைதலை, வேண்டுவோன்—விரும்புவோன், உயர் மொழி—பிறரை மேன்மைப் படுத்திச் சொல்லும் சொற்களை, தண்டான்—சொல்லாமல் தவிரான்.

தான் சிறப்படைய விரும்புவோன் பிறருடைய சிறப்புக்களை எடுத்துரைக்கப் பின்வாங்கமாட்டான்.

தண்டுதல் — நீங்குதல். தண்டான் — நீங்கான் — மாறான்—தவிரான். "தண்டாமலீவது தாளாண்மை" என்றும் "கண்டாம் கலுழ்வ தெவன் கொலோ? தண்டா நோய், தாம்காட்ட யாம்கண் டது" என்றும் வரு வனவற்றில் இச்சொல் இப்பொருளில் வருகின்றது.

2. வீங்கல் வேண்டுவோன் பல்புகழ் தண்டான்.

(ப—பொ.) ஆக்கத்தை வேண்டுவோ னொருவன் தனக்குப் பல புகழ் வரும் செய்கை களையான்.

(ப—ரை.) வீங்கல்—செல்வப் பெருக்கை, வேண்டுவோன்—விரும்பு வோன், பல்புகழ்—பலவகைப் புகழ்தரும் செய்கைகளை, தண்டான்—செய்யாமல் தவிரான்.

வீங்கல்—பெருகுதல், செல்வம் பெருகுதல், ஆக்கம். புகழ்—புகழ் தருஞ்செய்கை; ஆகுபெயர்.

"ஈதல் இசைபட வாழ்தல் அது வல்ல, தூதியம் இல்லை உயிர்க்கு" (திருக்குறள்) ஆதலால் செல்வம்பெருக வேண்டுமென்று விரும்புவோன் புகழுண்டாவதற்குக் காரணமான ஈகை முதலிய செய்கைகளைச் செய்யாமல் விடான்.

3. கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்.

(ப—பொ.) ஒன்றனைக் கற்றல் விரும்புவான் தன்னைக் கற்பிக்கும் ஆசிரியற்குச் செய்யும் வழிபாடு ஒழியான்.

(ப—ரை.) கற்றல்—ஒரு வித்தையைக் கற்றலை, வேண்டுவோன்—விரும்புகின்றவன், வழிபாடு—கற்பிக்கும் ஆசிரியனுக்குச் செய்யலான பணிவிடைகளை, தண்டான்—செய்யாமலிரான்.

வழிபாட்டின் இலக்கணம்:-"அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி, நிழலின் நீங்கான் நிறைந்த நெஞ்சமொடு, எத்திறத் தாசான் உவக்கும் அத்திறம், அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே."

"'கற்றலிற் கற்றாரை வழிபடுதல்' சிறந்தன்று" என்றார் முன். ஆதலால் "கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்" என்றார் இவ்விடத்து

4. நிற்றல் வேண்டுவோன் தவஞ்செய றண்டான்.

(ப—பொ) பிறப்புக் கெடுத்துத் தன்னை நிலைப்பிக்க வேண்டுவோன் தவஞ்செய்தல் ஒழியான்

(ப—ரை.) நிற்றல்—நித்தியமாகிய முத்தியின்பத்தில் நிலைபெற்றிருத்தலை, வேண்டுவோன்—விரும்புகின்றவன், தவம் செயல்—தவஞ் செய்தல், தண்டான்—ஒழியான்.

உடல் பொருள் முதலியன நிலையில்லாதவை யாதலால் முத்தியின்பத்தில் நிலைபெற்றிருத்தலை 'நிற்றல்' என்றார்.

தவமாவது "மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில்நிலை நிற்றலும், மாரியிலும் பனியிலும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம் உயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்து, பிறவுயிர்களை ஓம்பல்."

தவஞ்செய்ய வல்லார்க்கு அதனால் வரும் துன்பம் வருத்த வருத்தத் தம்மொடு கலந்த பாவம் நீங்கி ஞானம் மிகும். ஞானமிக்க அளவிலே பிறப்பு வீடுகளின் உண்மையுணர்ச்சி உண்டாகும். ஆகையால் "நிற்றல் வேண்டுவோன் தவஞ்செய றண்டான்" என்றார்.

5. வாழ்க்கை வேண்டுவோன் சூழ்ச்சி தண்டான்.

(ப—பொ.) வாழ்தலை மேன்மேலும் விரும்பிய ஒருவன் தான் எடுத்த தொழிலை ஆராய்தல் ஒழியான்.

(ப—ரை.) வாழ்க்கை — நல்வாழ்க்கையை, வேண்டுவோன்—மேன் மேல் விரும்புமவன், சூழ்ச்சி—தான் எடுத்த தொழிலைத் தக்கவரோடு ஆராய்ச்சி செய்தலை, தண்டான்—தவிரான்.

நல்வாழ்க்கைக்கு அவசியமானது காரியசித்தி; ஆகவே எடுத்த காரியம் நன்கு முடிதற்கான ஆராய்ச்சிகளைச் செய்வது ஒருதலை.

"தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்."—திருக்குறள்

6 மிகுதி வேண்டுவோன் வருத்தந் தண்டான்.

(ப—பொ.) அளவுமிக்க பொருள் வேண்டுவோன் முயற்சி வருத்தமெனநீக்கான்

(ப—ரை.) மிகுதி—அளவுமிக்க பொருளை, வேண்டுவோன்—விரும்பு கின்றவன், வருத்தம்—அதற்குரிய முயற்சி செய்வதில் உண்டாகின்ற வருத்தம் பற்றி, தண்டான்—அம்முயற்சியைத் தவிரான்.

மிக்கபொருளை விரும்புகின்றவன் அதற்குரிய முயற்சி செய்தலில் உண்டாகின்ற வருத்தம்பற்றி அம்முயற்சியினின்று ஒழியான்.

"தகுதி தண்டான்" பாடபேதம்.

பெருமையை விரும்புகின்றவன் நல்லொழுக்கத்தினின்று தவிரான் என்பது பொருள்.

7. இன்பம் வேண்டுவோன் துன்பந் தண்டான்.

(ப—பொ.) இன்பத்தை விரும்பிய ஒருவன் துன்பத்தைத் துன்பமென்று களையான்.

(ப—ரை.) இன்பம் வேண்டுவோன்—இன்பத்தை விரும்பிய ஒருவன், துன்பம் தண்டான்—அதற்குரிய முயற்சியில் உண்டாகும் துன்பத்தினின்றும் தவிரான்

சுகமாகவாழ விரும்புவோர் அதற்குரிய முயற்சியில் உண்டாகும் மெய்வருத்தம் முதலிய துன்பங்களைப் பாராட்டமாட்டார். தோட்டி போல் உழைத்துத் துரைபோல் சாப்பிடவேண்டும். துன்பத்துக்குப் பின்வாங்கினுல் இன்பம் உண்டாகாது. Of sufferance comes ease.

"துன்புள தெனினன்றோ இன்புளது."—இராமாயணம்.

8. துன்பம் வேண்டுவோன் இன்பந் தண்டான்.

(ப—பொ.) துன்பத்தை விரும்பிய ஒருவன் இன்பத்தை இன்பமென்று களையான்.

(ப—ரை.) துன்பம் வேண்டுவோன் — ஒருகாரியத்தில் முயலும் போது உண்டாகிற துன்பத்தை வெறுமல் விரும்பி ஏற்பவன், இன்பம்—பின்பு அதனலுண்டாகும் இன்பத்தை, தண்டான் — வெறுத்துக் களையான்.

முன்னே துன்பங்களைப்பட்டு அதனல் இன்பமடைய விரும்புவோன் அத்துன்பங்களினிமித்தமாக அவ்வின்பத்தை வேண்டாவென்று களையான்.

9. ஏமம் வேண்டுவோன் முறைசெய றண்டான்.

(ப—பொ.) குடிகளைக் காக்க விரும்பிய அரசன் முறைமைப்படி நடத்தலொழியான்.

(ப—ரை.) ஏமம் வேண்டுவோன் — குடிகளைப் பாதுகாத்தலை விரும்பிய அரசன், முறைசெயல் தண்டான் — நீதிமுறைமைப்படி அரசு செய்தல் தவிரான்.

குடிகளை ரக்ஷிக்க விரும்பிய அரசன் நீதிமுறை தவறுமல் நடப்பான்.

"ஓர்ந்துகண் ணேடா திறைபுரிந்து யார்மாட்டும், தேர்ந்துசெய் வஃதே முறை" (திருக்குறள்) என்பதனல் முறையின் இலக்கணம் விளங்கும்.

10. காமம் வேண்டுவோன் குறிப்புச்செய றண்டான்.

(ப—பொ.) காமத்தை விரும்பிய ஒருவன் குறிப்பறிதல் ஒழியான்.

(ப—ரை.) காமம் — காமவின்பத்தை, வேண்டுவோன் — விரும்புகின்றவன், குறிப்புச்செயல் — குறிப்பறிதல், தண்டான் — ஒழியான்.

குறிப்பறிதலாவது தலைமகன் தலைமகளது குறிப்பினை யறிதலும், தோழியது குறிப்பினை யறிதலுமாம்.

"இன்பந்தண்டான்" என்ற பாடத்துக்குக் காமவின்பம் நுகர்தல் தவிரான் என்பதாம்.



# முதுமொழிக் காஞ்சி

## அரும்பதவுரை.

அறத்தாறு—அறத்தின்நெறி—v. 8.
ஆசாரம்—ஒழுகும் ஒழுக்கம்—iii. 8.
ஆண்மை — ஆண்வினைத் தன்மை —பௌரஷம்—வீரம்—ii 10.
ஆர்கலி—கடல்.
இசை—புகழ்—vi. 3.
இளிவரவு—கீழ்மை—vi. 9.
ஈரம் — உயிர்களிடத்தில் உள்ள அன்பு—ii. 1.—மனத்துள் ஈரம்—v. 3; viii. 3.
உட்கு—மதிப்பு—அச்சம்—ix. 9.
உறழ்—கலகம்—viii. 2.
ஊங்கு—மேல்—vi. 9.
எச்சம்—ஆக்கம்—செல்வம் vi. 8.
எதிர்கோள் — முற்கொண்டு பாது காக்கும் காப்பு—ii. 5.
எற்றம் — உய்த்தல் — ஒரு காரியத்தை ஆராய்ந்து முடிக்கும் வல்லமை—ii. 5.
ஏமம்—பாதுகாத்தல்—x. 9.
ஒப்புரவறிதல்—செயக்கடவன செய்கை—vi. 2.
ஓங்கல்—உயர்வு—x. 1.
ஓதல்—நூல்களைக் கற்றல்—i. 1.
கண்ணஞ்சப்படுதல்—பிறர் அஞ்சி நடக்கத்தக்க நன்குமதிப்பு—i. 2.
கண்மாறல் — கண்ணோட்டமொழிதல்—iv. 7.
கதம்—வெகுட்சி—கோபம்—iv. 9.
காத்தல்—ஒளித்தல்—vi. 5.
கழிநறுகண்மை—மிக்கவீரம்—iv. 2.
கற்பு—கல்வியுடைமை—i. 7.
காட்சி—அறிவு—ii. 4.
காதல்—விருப்பம்—i. 2.
கிளை—சுற்றம்—v. 3.
குத்திரம்—படிறு—வஞ்சகம்—ii. 7.
குறளை — குறளைச்சொல் — கோட்சொல்—viii. 4.
கேளிர்-உறவினர் (நட்பினர்)-iii. 7.
கையுறல்—கருமமுடிதல்—vii. 4.
சாக்காடு—மரணம்—vi. 6.
சிதடி—மையற்றன்மை — அறிவின்மை—iv. 5.
சிறந்தன்று—சிறந்தது—i. 1.
சிற்றில்—சிறுமையுடையகுடி—ii 6.
சீருடையாண்மை — புகழுடைய ஆண்வினைத்தன்மை—ii. 10.
சூழ்ச்சி—ஆராய்தல்—x. 5.
செரு—போர்—viii. 2
செறுத்தல்—தண்டித்தல்—i. 9.
செற்றார்—பகைவர்—i. 9.
செற்று—உட்பகைகொண்டு—ix. 3.
சொலவு—சொல்லியசொல்—ix. 7.
சொல் — புகழ். சொன்மலை—மலைபோன்றபுகழ்—v. 4.
சொற்சோர்வு — சொல்லவேண்டுவதனை மறப்பான் ஒழிதல்—ii. 8.
சோரா — இளையாத — உறுதியுள்ள ii. 3. நெகிழவிடாத — உதவாத—v. 4.

சோர்வு—வழுவுதல்—தவறு—ii. 8
தகுவரவு—தகுதி—vi. 2.
தண்டான் — ஒழியான்—மாறான் — களையான் — தவிரான் — நீக்கான்—x.
தனிமை — தனித்திருத்தல்—ix. வறுமை—iv. 10.
தற்செய்கை — தன்னைப் பெருகச் செய்தல்—i. 9.
தாரம்—மனையாள்—v. 1.
துவ்வாது—நீங்கியொழியாது—ix
நசை—ஆசை—vi. 7, vii 9. விருப்பமாகிய பொருள்—viii 3
நலன்—அழகு—i. 6.
நல்குரவு—தரித்திரம்—vi. 7.
நல்கூர்ந்தன்று—வறுமையுறும்—ix
நாண் — செய்யத் தகாதனவற்றின் கண் உள்ளமொடுங்குதல்—i 6
நீர்—(நீர்மை)—குணம்—v. 1.
நேராத—உடன்படாத—v. 5
நேராமல்-ஒன்றுங்கொடாமல்-v. 6
நோனுதோன்-பொறுதவன்-vii. 7. வேண்டாதோன்—vii 8
படிறு—வஞ்சகம்—ii. 7.
பாத்தூண்—பகுத்துண்டல்—viii 9.
பிணி—நோய்—viii. 7.
புத்தேள்—கடவுள்—viii 1
புலவி—பிணங்குதல்—ix. 5.
புலைமை—நீசத்தன்மை—iv. 6
பெருமிதம்—செருக்கு—ii 6.
பேண்—விருப்பம்—iv. 4.
பேரில்—பெருங்குடி—ii. 1.
பொருணசை—பொருளில் விருப்பம்—vii. 9.
மறைவிரி—இரகசியத்தை வெளிப்படுத்தல்—viii. 4.
மாற்றல்—மறுத்தல்—iv. 3.
மீக்குணம் — மேன்மையானவற்றைச் செய்யும் இயல்பில்லாமை. வரம்பு கடந்த செய்கையைச் செய்யும் இயல்பு—iii. 2.
மீப்பு—மேன்மைக்குணம்—iii. 2.
முறை—நீதிமுறை—iii. 6 x. 9. நீதியை மேற்கொண்டு நடத்தல் —vii 9.
முறையிலரசர் — நடுவு செய்யாத அரசர் iii. 6
மேதை-தானாக ஒன்றை மதியுடைமையான் அறியும் அறிவு—i. 3.
மேல்வரவு—எதிர்காலத்து வருவது —vii. 5.
மேற்கோள்-மேற்கொளவது-iv. 5.
யாப்பிலோர் — ஒரு செய்கையின் கண்ணும் நிலையில்லாதார்—iii. 1.
வண்மை—செல்வம்—i 4.
வள்ளியன்—வண்மையுடையவன்—iii. 9.
வாயா—பொருந்தாத—vi 4.
வாய்ப்பு—பேறு—vi. 3.
வாய்மை—உண்மை—i. 4.
வாலியன்—தூயோன்—பரிசுத்தன்—vii. 10
விழைச்சு—கலவி—vi. 3, 4
வீங்கல்—ஆக்கம்—x. 2.
வெய்யோர் — விரும்பினவர் — viii. 1, 3, 4.
வேட்கை — ஆசைப்பெருக்கம் — vii. 9.
வேளாண்மை—உபகாரம்—iv. 6.

Printed at the S.P.C.K. Press, Vepery, Madras—B.9789.

